### ப்ரஸங்காத் ததிபாண்டனுடைய கதை

ஸ்ரீக்ருஷ்ணவதாரத்தில் ததிபாண்டனென்னும் இடையனுடைய கதை ப்ரஸித்தமானது. தாயெடுத்த சிறு கோலுக்கு உளைந்தோடிவந்த கண்ணபிரானை மறைத்திட்டுவைத்து, அவனைப் பிடித்தடிப்பதற்காகத் தொடர்ந்துவந்த யசோதை 'என் மகன் இங்கு வந்ததுண்டோ?' என்று கேட்க, 'அவன் இங்கு வரவில்லை, அவனை நானறியேன்'' என்று அஸத்யமே சொன்ன ததிபாண்டன் தனது தயிர்த்தாழிக்கு முட்பட மோக்ஷம்பெற்றுப்போனான்; ஸத்யவாதியென்று பேர்பெற்ற தசரத சக்ரவர்த்தி நரகபர்யாயமான ஸ்வர்க்கத்தையே பெற்றுநின்றான். இதனால், தசரதனுடைய ஸத்யவாதித்வம் எம்பெருமானை யிழப்பதற்குறுப்பானபடியாலே அஸத்யத்தின் பலனையே தந்துநின்றதென்று தெரிந்துகொண்டோம்.

### இராமனதுஸத்யவாதித்வத்தை இரண்டுவகையாக மூதலிக்கிறோமென்பது

இராமபிரானுடைய ஸத்யவாதித்வப் பெருமையை இரண்டு வகையாக மூதலிக்க விரும்புகின்றோமிங்கு. இன்னின்ன சரிதைகளினால் இராமனுடைய ஸத்யவாதித்வம் விசதமாகத் தெரிகின்றதென்று நிரூபணஞ் செய்தல் முதல்வகை. இன்னின்ன கதைகளினால் இராமனுடைய ஸத்யவாதித்வத்திற்குக் குறைகாண்கிறதேயென்று க்ஷேபித்துச் சொல்வாருடைய ஆக்ஷேபவார்த்தைகளை யெடுத்துக் காட்டி அவற்றுக்குப் பரிஹார முணர்த்தும் முகத்தால் அந்த ஸத்யவாதித்வத்தை நிலைநாட்டுவது இரண்டாம்வகை.

### *ஸத்யேந லோகாந் ஜயதி விவரணம்

முதல்வகையில் நிரூபணம் கேண்மின் இராமபிரானுக்கு யுவராஜ பட்டாபிஷேகம் நடைபெறப்போகின்றதென்பதை யுணர்ந்த கைகேயி மந்தரையினால் மனம்கலக்கப்பெற்றுக் கோபாவேசங் கொண்டு, சக்ரவர்த்தி பக்கலிலே இராமனுடைய வனவாஸத்தையும் பரதாபிஷேகத்தையும் பிரஸ்தாவித்தபோது, சக்ரவர்த்தி மூர்ச்சித்துக்கிடந்து பிறகு மூர்ச்சை தெளிந்து அக்கைகேயியை நோக்கிப் பல கூறுகின்றான்; [அயோத்தியாகாண்டம்—பன்னிரண்டாவது ஸர்க்கம்.] "அடீ கொடியவளே! இந்த வமிசத்தைக் கெடுக்கவந்த பாவியே! இராமனாவது நானாவது உனக்குச் செய்த தீங்கு ஏதேனுமுண்டோ? இராமன் பெற்றதாய்க்குப்போலவே உனக்கும் பணிவிடை செய்துகொண்டிருக்கின்றானே! அன்னவன்மீது நீ கடிய மனம் கொண்டனையே! இந்த துர்ப்புத்தி உனக்கு எங்ஙனம் உண்டாயிற்று? உன் தன்மையறியாது உன்னை இவ்வீட்டினுள் கொணர்ந்து சேர்த்துக்கொண்ட எனது புத்தியையன்றோ நிந்திக்க

வேண்டும். பறவைகள் விலங்குகள் முதற்கொண்டு ஸகல பிராணி வர்க்கங்களும் புகழும்படி நற்குண நற்செய்கைகள் வாய்ந்த இராமனை எங்ஙனம் நான் வனம் போகவிடுவேன்? இராமனைவிட்டு ஒரு நொடிப் பொழுதாயினும் என்னுடலில் உயிர் தங்கியிருக்குமோ? அடி பாவீ! நீ கொண்ட கொள்கை என்னுயிரையே மாய்க்கவல்லதாக வன்றோ இருக்கிறது; இக் கொடிய கருத்தைக் கூசாது நீ என்னிடம் கூறினவளவே போதும்; இவ்வளவோடு இக்கருத்தை விட்டுத் தொலைப்பாயாக: உனக்கு நான் கணவனுக இருந்தாலும் உன் பாதங்களில் என் தலையை மடுத்து வணங்கி வேண்டிக்கொள்ளவும் கூச்சமற்றிருக்கின்றேன். கலக்கந் தீர்ந்து என்மேல் அருள்புரிவாயாக; என்றினையவார்த்தைகளைச் சொல்லிவரும்போது இராமனுடைய நற்குணங்களை நாலைந்து சுலோகங்களினுல் கல்லும் உருகக் கூறுகின்றான் தயரதமன்னவன்; அவற்றுள் தலையான சுலோகம் இது;

“ஸத்யேந லோகாந் ஜயதி தீநாந் தாநேந ராகவ:,
குரூந் சுச்ரூஷயா தீரோ தநுஷா யுதி சாத்ரவாந்.”

(இதன் பொருளாவது,) இராமன் ஸத்யவாக்கின் பெருமையினுல் ஸகல லோகங்களையும் தானிட்ட வழக்காகக் கொண்டிருக்கிறான்; ஏழைகளைக் கொடையினுல் கவர்கின்றான்; ஆசிரியர்களைப் பணிவிடையினுல் கவர்கின்றான்; போர்க்களத்தில் வில்லினுல் பகைவர்களைக் கவர்கின்றான்; என்பது. இவற்றுள் ‘ஸத்யேந லோகாந் ஜயதி’ என்பது தலைமைபெற்ற விஷயம். இதற்கு அடுத்த சுலோகத்திலும் ஸத்யம் என்று தொடங்கி இராமனுடைய மெய்ம்மைப் பெருவார்த்தையின் மேன்மை புகழப்படுகின்றது. இங்ஙனே பலர் பலவிடங்களில் இராமபிரானது ஸத்யத்தைப் பற்றிப் புகழ்ந்து பேசியிருந்தாலும் மேலே குறித்த சுலோகத்தில் ‘ஸத்யேந லோகாந் ஜயதி’ என்றிருப்பது விலையுயர்ந்த ரத்னமாகக் குலாவப்படுகின்றது. பகவத்விஷயப் பேராசிரியரான நம்பிள்ளையினுடைய வைபவத்தில் ‘ஸத்யேந லோகாந் ஜயதி’ என்கிற இந்த ச்லோகத்தின் சார்பான சொற்பெருமை தலைசிறந்து விளங்குகின்றது. அதனைச்சிறிது விவரிப்போம்.

## நம்பிள்ளை நிர்வாஹ விவரணம்

பட்டருடைய ஸந்ததியில் தோன்றி மகாவித்வானுயிருந்த நடுவில்திருவீதிப்பிள்ளைபட்ட ரென்பவர் நம்பிள்ளைகாலத்தில் திருவரங்கப் பெருநகரில் வாழ்ந்தவர். இவரும் ஓரிடத்திலே ஸ்வரூபக்ரந்தங்களைப் பிரவசனம் செய்துவந்தார். ஆனுலும் பெரும்பாலோர் நம்பிள்ளை கோஷ்டியிலேயே அந்வயித்து இவருடைய கோஷ்டியில் மிகச்சிலரே சேர்ந்திருந்தனர். அதனுல் இவர்க்கு நம்பிள்ளையிடத்தில் பொருமையுண்டாகியிருந்தது. இவர் ஒரு நாள் ராஜஸபைக்குச்

சென்றிருந்தார். அவ்வரசன் மஹாவிவேகியுமாய், தன்னிடம் வருகிற பண்டிதர்களை யெல்லாம் ஸ்ரீராமாயணம் முதலிய நூல்களில் கேள்வி கேட்பவனுமாயிருந்தபடியால் இந்தப் பட்டரையும் ஸ்ரீராமாயணத்தில் ஒரு கேள்வி கேட்டான். அதாவது:

"ஸ்ரீமந்நாராயணமூர்த்தியே இராமபிரானாக வந்து திருவவதாரம் செய்திருந்தும் ஸ்ரீராமன் நாராயணத்வப்ரயுக்தமான பெருமையை அறவே மறைத்துக்கொண்டு மனுஷ்ய பாவனையையே பூர்த்தியாக ஏறிட்டுக்கொண்டு அஜ்ஞரைப் போலவும் அசக்தரைப் போலவுமிருந்தான் என்று தெரியவருகின்றது; ஸ்வாமிகளே! இப்படி நான் கிரகித்திருப்பது யுக்தமானதுதானே, பிசகல்லவே" என்று கைகூப்பிக்கொண்டு சொன்னான். அதுகேட்ட பட்டர் "ஆமாம், நீங்கள் கிரகித்திருப்பது யுக்தமே; நாராயணத்வப்ரயுக்தமான பரத்வத்தைக் கழற்றிவைத்துவிட்டு மநுஷ்யபாவனையில்தான் நடனம் செய்திருக்கிறார் ஸ்ரீராமமூர்த்தி; இதில் என்ன சந்தேகம்? இப்படிக்கு இசைந்தால்தான் ஸ்ரீராமாயண கதைகள் பொருந்தும்" என்று விடை கூறினர். இதைக்கேட்ட அரசன் "ஸ்வாமிகளே! அப்படியானால் இராமன் *மயா த்வம் ஸமநுஜ்ஞாதோ கச்ச லோகாந் அநுத்தமாந்* என்று சொல்லி ஜடாயுவுக்கு முத்தியளித்ததாகக் கதை காண்கிறதே, இது பொருந்துமாறு என்? அப்போது இராமன் தன்னுடைய மனைவியான பிராட்டி சென்றவிடம் அறியாமல் "மரமே! பார்த்தாயா? மயிலே! நீ கண்டாயா? குயிலே! நீ அறிவாயா?" என்றிப்படி அஃறிணைப் பொருள்களையும் கேட்டுத் தளர்கின்ற நிலையாயிரா நின்றது; அந்நிலையில் ஜடாயுவை நோக்கி 'நான் உனக்குக் கட்டளையிடுகிறேன், மோக்ஷம் போவாயாக' என்று சொன்னார் பெருமாள் என்றால் இது பொருத்தமாக இல்லையே? ஸ்வாமிகள் இதனைப் பொருந்தவிட்டு என் மனம் த்ருப்தியடையும்படி சமாதானம் சொல்ல முடியுமோ?" என்றான்.

கேள்வியோ வலிதாயிருந்தது. பட்டருக்கு ஸமாதானம் ஸ்புரிக்கவில்லை. கூரத்தாழ்வான் அருளிச்செய்த அதிமாநுஷ ஸ்தவத்தில் "ப்ருச்சாமி கிஞ்சந யதா கில ராகவத்வே" "அக்ஷுண்ண யோகபதம்" என்று தொடங்கியுள்ள இரண்டு ச்லோகங்களிலும் இதே கேள்வியுள்ளது என்பதை நினைத்துக்கொண்டாரேயல்லது, கேள்விக்கு த்ருப்திகரமான ஸமாதானம் சொல்ல விரகறிந்திலர். இவருடைய அத்ருஷ்டவசத்தால் அப்போது அவ்வரசனுக்கு வேறொரு பணியில் மனவூக்க மேற்பட்டது; அன்றியும், நம்பிள்ளை திருவடிகளில் பழுக்கக் கேட்டவொரு பெரியார் யாத்ருச்சிகமாக அவ்வரச சபையில் தென்பட்டார். அவரைக் கண்டவுடனே பெருமகிழ்ச்சி கொண்டு பட்டர் அவரிடத்தில் அரசனுடைய கேள்வியை யெடுத்

துரைத்து 'இவ்விஷயம் நம்பிள்ளை கோஷ்டியில் விசாரத்திற்கு வந்திருக்குமே; நம்பிள்ளை நிர்வஹிக்கும் விதம் யாது?' என்று செவியோடு செவியாகக் கேட்டார். கேட்டவுடனே அவர் "ஸத்யேந லோகாந் ஜயதி என்கிற ஸ்ரீராமாயண ச்லோகத்தைக் கொண்டு நம்பிள்ளை நிர்வஹிக்கக் கேட்டிருந்ததுண்டு" என்று கூற, பட்டர் அதைத் தம் திருவுள்ளத்திலே கொண்டு 'இதுதான் பொருத்தமான ஸமாதானம்' என்று அறுதியிட்டுக்கொண்டார். வேறு பணியில் இருந்த அரசனும் அபிமுகனுகி 'ஸ்வாமிகளே! என் கேள்விக்கு ஸமாதானமொன்றும் ஸ்புரிக்கவில்லையோ' என்றுன். அதற்கு பட்டர், 'மஹாப்ரபோ! ஸ்புரிக்காமலென்ன? அப்போதே சொல்ல ஸஜ்ஜனுயிருந்தேன்; தாங்கள் அந்யபரராய் இருந்தபடியாலே நானும் சமயம் எதிர்பார்த்திருந்தேன்; இப்போது கேளுங்கள்' என்று பீடிகையிட்டுக்கொண்டு நம்பிள்ளை சிஷ்யரிடம் கேட்ட நிர்வாஹத்தைப் பன்னியுரைத்தார்; அதாவது, இராகவன் ஸத்யவாக்கின் பெருமையினுல் ஸகலலோகங்களையும் ஸ்வாதீனமாகவுடையவன்' என்று தசரத சக்ரவர்த்தி சொல்லியிருப்பதனுல் அந்த ஸத்யவாக்கின் பெருமையே ஜடாயுவுக்கு முத்தியளித்ததாம். நாராயணத்வப்ரயுக்தமான பரத்வத்தினுல் முத்தியளித்தபடியன்று' என்று.

### ராஜஸன்மான விசேஷங்கள்

பட்டர் அரசனுக்கு இதை விரிவாக உணர்த்த, அரசன் மேதாவியாகையாலே மிகவுகந்து, இங்ஙனேயல்லது வேறுவகையாக ஸமாதானம் சொல்லப் பொருந்தாதென்று துணிந்து உள்குழைந்து பட்டரை விசேஷமாக ஸன்மானித்துப் போகவிட்டான். பட்டர் ப்ராமாணிகராகையாலே அந்த ஸத்காரத்தைத் தம்முடைய க்ருஹத்திற்குக் கொண்டுபோக மனங்கொள்ளாமல், 'நம்பிள்ளையின் ஸ்ரீஸூக்திரத்நாகரத்தில் ஒரு சிறு திவலைக்குப் பெற்ற ஸத்காரமன்றோ விது' என்று உள்ளமுருகி அதை நம்பிள்ளை திருவடிவாரத்திலே கொண்டு ஸமர்ப்பித்து 'தேவரீருடைய ஸ்ரீஸூக்திகளில் சிந்திப்போன ஒரு சொல்லுக்குப் பெற்ற ஸத்காரமிது; இது காறும் அடியேன் அகன்றிருந்து அனர்த்தப்பட்டது போதும்; இனி நிழலுமடிதாறுமாக அங்கீகரித்து அடியேனை வாழ்வித்தருளவேணும்' என்று வேரற்ற மரம் போலே விழுந்துவேண்டி அடிபணிந்து உய்ந்தாரென்பது வரலாறு.

இதனுல், இராமபிரானுடைய ஸத்யவாக்கின் பெருமையை நம் முன்னேர்கள் நிரூபிக்கும் திறம் அறியலாகும். இனி இரண்டாவது வகையில் நிரூபணம் கேண்மின்; ஸ்ரீராமனுடைய ஸத்யவாதித்வத்திற்கு ஸ்ரீராமாயண கதையைக் கொண்டே குறை சங்கித்து, அதற்குப் பரிஹார முணர்த்துகிரேம்.

### ஸ்ரீராமனுடைய ஸத்யவாதித்வத்தில் சங்காபரிஹாரங்கள்

இராமனுக்கு மகுடாபிஷேகஞ் செய்வதாகச் சக்கரவர்த்தி நிச்சயித்து நியமனம் தந்து அதற்குப் பூர்வாங்கமாக ஆகவேண்டிய சடங்குகளும் முடிவுபெற்று அபிஷேகமாக வேண்டிய ஸமயத்தில் கைகேயியின் வாக்குக்குக் கட்டுப்பட்ட மன்னவன் இராமனுக்கு வன வாசத்தை நியமிக்கவேண்டிவந்ததென்கிற கதாசந்தர்ப்பம் யாவரு மறிந்ததே. மகுடாபிஷேகம் கொண்டருள ஸித்தனயிருந்த இராம னுக்கு, முடிதவிர்ந்து சடைபுனைந்து மரவுரியுடுத்து நல்லுணவுகளை யொழித்துக் காய்கிழங்குகளைப் புசித்துக் கல்லும் முள்ளுமான காட்டு வழிகளிலே திரிந்து பதினன்கு வருஷகாலம் வனவாஸஞ் செய்ய நேர்ந்ததென்றால், உண்மையில் இது வருத்தமாக இருக்கக் கூடுமா? ஆனந்தமாக இருக்கக்கூடுமா? என்று நாம் ஆலோசிக்குமள வில், தலைவிதியென்று ஒப்புக்கொள்ளவேண்டியதாக நேர்ந்த இவ் விஷயத்தில் ஆனந்தம் எப்படியிருக்கக்கூடும்? உள்ளபடி வருத்தந் தானிருக்கும் என்றே பலரும் நினைக்கத்தக்கதும் சொல்லத்தக்கது மாம். ஆனால், இது தவறான அபிப்பிராயமேயாகும். ராஜ்யாபி ஷேகத்திற் காட்டிலும் வனவாஸத்தில் இராமபிரானுக்கு மிக்க மகிழ்ச்சியேயென்று அவன்றனது வாக்கினின்று நன்கு தெரிகின் றது. [அயோத்யா காண். 22-29.]

"மா ச லக்ஷ்மண ஸந்தாபம் கார்ஷீர் லக்ஷ்ம்யா விபர்யயே,
ராஜ்யம் வா வநவாஸோவா வநவாஸோ மஹோதய:"

என்பது இராமபிரான் சோதிவாய் திறந்தருளியவாசகம். இளை யோனை நோக்கிக் கூறிய இவ்வார்த்தையில் "நமக்கு ராஜ்யமானு லென்ன? வனவாஸமானுலென்ன?" என்று முதலிற்சொல்லி, உடனே "வநவாஸோ மஹோதய:" என்று வனவாஸந்தான் பேரின்ப மென்று கூறின இராமபிரான் பொய்யாகக் கூறுமவனல்லனே; நெஞ்சிலுள்ளதை உள்ளபடி யுரைப்பவனன்றோ இராமன்.

### கம்பர் வாக்கைக் காட்டுதல்

இவ்விஷயத்தைக் கம்பர் கூறுமிடத்து வெகு ஆச்சரியமாகக் கூறுகின்றார்—"இராமன் திருமுகச் செவ்வினோக்கின்....அப்பொழு தலர்ந்த செந்தாமரையினை வென்றதம்மா." என்று, கலக்கிய மாமனத்தனளாய்க் கைகேசி வரம்வேண்ட மலக்கிய மாமனத்தன னாய் மன்னவனும் மறுதொழிய, குலக்குமரா! காடுறையப் போ வென்று விடை கொடுத்தவளவிலே இராமபிரானுக்குண் டான மனமகிழ்ச்சி, இப்பொழுது எம்மனோரால் இயம்புதற் கெளிதோ?—அப் போது அத்திருமுகமண்டலத்தை நேராகச் சேவிக்கப்பெற்றவர்கள் பேசத் தக்கதேயல்லது அதனைக் கண்ணுற் காணாத நான் எனது

புல்லிய சொல்லைக்கொண்டு அறிவிக்கப் பார்ப்பது பேதைமை யன்றோ வென்று கையொழிந்து நின்ற கம்பர், மீண்டும் அதனைச் சொல்லுவதாகத் தொடங்கி "வனவாஸ நியமனம் பெறுதற்கு முன்னே இராமபிரானது திருமுகமண்டலம் தாமரையோடொத்த தாகமாத்திரம் சொல்லலாம்படி யிருந்ததென்றும்; வனவாஸ நிய மனம் பெற்றபின்போ வென்னில்; அப்போதலர்ந்த செந்தாமரைப் பூவின் செவ்வியிற் காட்டிலும் பன்மடங்கு மேம்பட்ட செவ்வியைப் பெற்றதென்றும் கூறி முடித்தனர்.

## ஸ்ரீராமன் அஸத்யவாதியென்கிற பூர்வபக்ஷம்

இங்ஙனே அதிசயமாகக் கூறுதற்குக் காரணம் *வநவாஸோ மஹோதய:* என்று இராமபிரானருளிய சொல்லேயாகும். நன்கு ஆராய்ந்துபார்க்குமிடத்து இது அஸத்யமாகச் சொன்னதேயல்லது ஸத்யமாகச் சொன்ன தன்றென்றும், மகுடாபிஷேக மங்களம் தவறிப்போயிற்றே யென்கிற துக்கமே இராமனது அடிவயிற்றில் குடிகொண்டிருந்ததென்றும் கண்டறியும்படியாக்வுள்ளது. எங்ஙனே யென்னில்; இராமன் பஞ்சவடியில் ஸீதையைப் பிரிந்த வருத்தத் தினுல் புலம்புகையில், [ஆரண்யகாண், 67-25]

"ராஜ்யாத் ப்ரம்சோ வநே வாஸோ நஷ்டா ஸீதா ஹதோ த்விஜ:,
ஈத்ருசீயம் மமாலக்ஷ்மீ: நிர்தஹேதபி பாவகம்"

என்று சொல்லிப் புலம்பியது ஸ்பஷ்டமாகவுள்ளது. இதன் பொருள் யாதெனில்; "கிடைக்கவேண்டிய ராஜ்யம் அந்தோ! கிடைக்காமற் போயிற்று; ராஜ்யம் கிடைக்காமற்போனுலென்ன? நகரத்திலேயே ஒரு மூலையில் வஸிக்கப்பெற்றிருக்கலாமே; அதுவுமில்லாமல் காட்டில்வந்து திண்டாடவேண்டியதாயிற்றே; இப்படிப்பட்ட தன்றோ என் தரித்திரம்!" என்பதாம்.

இங்ஙனே புலம்புகின்றபடியை நோக்கினுல் ராஜ்யமிழந்து வனவாஸம் பெற்றது பெருந்துயராகவே பெருமாளுடைய அடிவயிற் றில் உறைந்து கிடக்கிறதென்று தெரியவில்லையா? உண்மை இப்படியிருக்க 'வநவாஸோ மஹோதய:' என்று அப்போது சொன்ன வார்த்தை அஸத்யமென்றே கொள்ளவேண்டியதாகிற தன்றோ. இங்ஙனே பலர் சங்கிக்க இடமுள்ளது.

## மேலேகாட்டிய பூர்வபக்ஷத்திற்குப் பரிஹாரம்

இனி இதற்குப் பரிஹாரம் கூறுவோம்; "ராஜ்யாத் ப்ரம்சோ வநே வாஸ:" என்று பரிதபித்துச் சொன்னவிது எந்த ஸமயத்தில்? எதனுலே? என்று நன்கு ஆலோசிக்கவேண்டும், பிராட்டியைப்

பிரிந்தும் பரமபாகவதோத்தமரான ஜடாயுமஹாராஜரையு மிழந்தும் பரிதாபம் பொறுக்கொணுதிருந்த ஸமயத்தில் வெளிவந்த வார்த்தை யிது. வநவாஸக் கட்டளை கிடைத்தபோது "வநவாஸோ மஹோதய:" என்று சொன்னது என்ன திருவுள்ளத்தாலென்னில், கேண்மின் ; ஜநகசக்ரவர்த்தி ஸீதாபிராட்டியைத் தாரை வார்த்துக் கொடுக்கும் போது "இயம் ஸீதா மம ஸுதா ஸஹதர்மசரீ தவ" என்று சொல்லிக் கொடுத்தார் ; ஸ்ரீராமபிரான் தான் செய்யக்கடவதான தருமத்திற்கு அவளைத் துணைவியாகக் கைப்பற்றினது இதனுல் விளங்கிற்று. இராமன் தான் செய்யக்கடவதான தருமம் எதுவென்னில் ; சரணுகத பரித்ராணமேயாகும். [இவ்விஷயம் 'க: தர்மஜ்ஞ:?' என்ற மூன்ரும் விணுவின் விவரணத்தில் விரித்துரைக்கப்பட்டுள்ளது.] பிராட்டியுடன் காட்டுக் கெழுந்தருளினது சரணுகத ஸம்ரக்ஷணமாகிற பரமதர் மத்தை நிறைவேற்றுதற்குப் பாங்காகுமென்ற குதூஹலத்தாலே யாயிற்று. காகாஸுர பரித்ராணம் முதலிய தருணங்களில் பிராட்டி கூடவிருந்தது ஸபலமாகப்பெற்றதைப் பெருமாள் நன்கறிந்தவர். அப்படிப்பட்ட பிராட்டியைப் பிரிந்த துக்கம் ஒன்று ; பரமபாகவதர் களோடுகூடிவாழலாமென்கிற குதூஹலத்தோடேகாடேறவந்தவர்க்கு மஹாபாகவதோத்தமரான ஜடாயுமஹாராஜரை இழந்த துக்கம் மற் ரென்று ; இதுவே மிகப்பெரிய துயராம். இவ்விரண்டு துக்கங்களி லும் திருவுள்ளம் உடைகுலைப்படவே காட்டுக்கு வந்தது விபல மாகவும் விபரீதபலமாகவுமாயிற்றே என்கிற துக்கத்திஞல் ராஜ்யாத் ப்ரம்சோ வநே வாஸ: என்கிற ச்லோகம் ஆவிர்ப்பவித்ததில் பிசகொன்று மில்லை ; இதனுல் "வநவாஸோ மஹோதய:' என்று முன்னம் சொன்னது பொய்யாக நினைக்க வொண்ணுததே.

## பொருத்தமான த்ருஷ்டாந்தமொன்று காட்டுதல்

ஒரு பெரியவர் திருவல்லிக்கேணி பார்த்தஸாரதியின் மஹோத் ஸவத்தை ஸேவிக்கப் பலவருஷங்களாகப் பாரித்து வெகுகுதூஹலத் துடன் அவ்விடம் வந்து சேர்ந்தார் ; வந்த விடத்தில் ஒரு விதமான ஸெளகரியமும் கிடைக்காமல் வெய்யில் மழை முதலான கஷ்டங் களில் சிக்கித் தெருவில் திண்டாடிப் பெருமாள் ஸேவையும் ப்ராப்த மாகா தொழிந்தால் அப்போது அவரது வாயினின்று பரிதாப வார்த்தை எவ்விதமாக வெளிவரக் கூடுமென்று பாருங்கள் ; 'அந்தோ நாம் நம்மூரிலேயே ஸுகமாக வாழ்ந்திருக்கலாமே ; ஏதுக்கு இப்படி வந்து வருந்துகிறேம் ! இதுவும் ஒரு விதியா நமக்கு !' என்றிப்படி பலவாறு சொல்லிப் புலம்ப நேர்கின்றது. இது எங்கும் ஸம்பா விதமே, அஸம்பாவிதமன்று. அதனுல் என்னகுறை ? ஊரிலிருந்து புறப்பட்டு வரும்போது அவர்க்கிருந்த குதூஹலத்தில் குறைகூற முடியுமோ ? பொய்யான குதூஹலத்திஞல் புறப்பட்டாரவர் என்று

இதுகொண்டு சொல்லமுடியுமோ? எந்த விருப்பத்தினுல் முதலில் குதூஹல முண்டாயிற்றே அந்த விருப்பம் முட்டுப்பட்டால் முன்னிருந்த குதூஹலம் மாறுபடுமன்றே. இது உலகமெங்குங்காணும் நீதியேயாம். இராமபிரானுடைய திருவாக்கில் 'வநவாஸோ மஹோதய:' என்ற வார்த்தை வெளிவந்தபோது வநவாஸ குதூஹலம் ஸத்யமாகவே யிருந்ததன்றி அதில் பொய்ம்மை சிறிதுமில்லை என்பது இவ்வளவால் நிரூபிக்கப்பட்டது. இங்ஙனே ஸ்ரீராமாயணத்தில் மற்றுஞ் சில சங்கைகளும் தோன்றக்கூடியவையுள; அவற்றுக்கும் இவ்வழியானே பரிஹாரம் காணத்தக்கது. .... .... *

---

## 6. க: த்ருடவ்ரத:?

வான்மீகி நாரத ஸம்வாதத்தில் "கோ த்ருடவ்ரத:" என்கிற ஆறுவது வினு இனி விவரிக்கப்படுகின்றது. திடமான விரதமுடையவன் யாவன்? என்று வினவுகின்றுர் வான்மீகி முனிவர். ஒரு காரியத்தைச் செய்து முடிக்கவேணுமென்கிற சங்கற்பத்திற்கு விரதம் என்று பெயர். அந்த சங்கற்பம் சிறிதும் தளராமல் திடமாக இருக்கப்பெறுவது ஒரு சிறந்த குணம். ஏகாதசியன்று உபவாஸமிருத்தல் முதலியன உலகில் நம் போல்வார்க்கு விரதமெனப்படும். ஆனுல் நாம் எதிலும் உறுதியுடையோமல்லோம். ஒரு பணியைத் தொடங்கும்போது அதில் மிகமிக உற்சாகங்கொண்டிருப்போம்; சில நாள் கழிந்தவாறே அதில் தளர்ச்சியுண்டாகி மற்றெரு பணியில் கைவைப்போம். அதிலும் அப்படியேயாகும். ஆகவே, ஒன்றிலும் உறுதியில்லாதவர்கள் நாம். இராமபிரானே வென்னில் எதிலும் மிக்க வுறுதியுடையவன். இவ்வரிய பெரிய குணத்தை இங்கு நாம் விரிவாக அநுபவிக்க விரும்புகின்றேம்.

### இராமனுக்கு விரதம் அடியாரைக் காப்பதேயென்பது

இராமன் எந்தக் காரியத்தில் திடமான விரதமுடையவன்? என்று கேள்விவரும். எல்லாக் காரியங்களிலுமே திண்ணமான ஊக்கமுடையவனுயினும், இராமன் முக்கியமாகக் கொண்டகாரியம் ஒன்றேயாகும். அதுதான் சரணுகதபரித்ராண மென்பது. பிராட்டியும் இராவணனை நோக்கி உபதேசம் செய்யுமிடத்து "விதிதஸ் ஸஹி தர்மஜ்ஞ: சரணுகத வத்ஸல:" என்று கூறினளாதலால் அடைக்கலம் புகுந்தவர்களை அஞ்சலென்று கூறி அபயமளித்து அநிஷ்ட நிவ்ருத்திகளையும் இஷ்டப்ராப்திகளையும் செய்வித்துக் காத்தருள்வதே இராமனுக்கு இவ்வவதாரத்தில் மிகமுக்கியமான காரியமாயிருந்ததென்று நன்குணரலாகிறது. ஸ்ரீ வேதாந்ததேசிகனும் அபயப்ரதானஸாரத்

தின் முகப்பில் "நமஸ்தஸ்மை கஸ்மைசந பவது நிஷ்கிஞ்சந ஜநஸ்வயம் ரக்ஷா தீக்ஷா ஸமதிக ஸமிந்தாநயசஸே" என்றருளிச்செய்திருப்பது குறிக்கொள்ளத் தக்கது. அகிஞ்சநர்களான ப்ரபன்னர்களைத் தன் பேறாகக் காத்தருள்வதில் தீக்ஷைகொண்டு அதுவே பெரும்புகழாக விளங்குமவன் இராமபிரான் என்பது மேலெடுத்த சுலோகத்தின் கருத்து. "ஸர்வாவஸ்த ஸ்க்ருத் ப்ரபந்ந ஜநதா ஸம்ரக்ஷணைகவ்ரதீ" என்று தசாவதார ஸ்தோத்ரத்திலருளிச்செய்திருப்பதும் காண்க. அடியார்களைக் காத்தருள்வ தென்பது கிடக்கட்டும்; அதில் திடமான வுறுதியையுடையவன் இராமன் என்பதே இங்கு விஷயம். இதைப் பற்றி ஸ்ரீராமாயணத்தில் இரண்டிடங்களை முக்கியமாக எடுத்துக் கொள்வோம். ஆரணிய காண்டத்தில் 6, 9, 10 ஆகிய மூன்று ஸர்க்கங்களின் விஷயங்களை முதலில் நிரூபணம் செய்வோம். அங்கு ஆறுவது ஸர்க்கத்திலுள்ள கதையாவது: சரபங்கமுனிவரது ஆச்ரமஞ் சென்றிருந்த இராமபிரான் அம்முனிவர் சுவர்க்கஞ் சென்றபின் அங்குள்ள முனிவர்களால் இங்ஙனம் வேண்டப்பட்டான்; 'ராமா! நீ தேவேந்திரனைப்போல் இந்நிலவுலகுக்கெல்லாம் நாதனாயிருக்கின்றனை; சரபங்கமுனிவரை அனுக்கிரகித்த கீர்த்தியும் விராதனைக் கொன்ற வீரமும் உன்பால் சிறந்து விளங்குகின்றன. தந்தை சொற்பேணி அரசாட்சிப்பெருஞ் செல்வத்தை வெறுத்ததுமன்றி, பரதன் வந்து மிகமிக வேண்டினவிடத்தும் மனவூக்கம் குன்றாதிருக்கின்றனை; உன்பக்கல் தருமமும் சத்தியமும் தழைத்தோங்குகின்றன; சரணாகத ரக்ஷகனான உன்னிடத்தில் ஒரு விண்ணப்பஞ் செய்கின்றோம்; வருத்தம் தாங்கி நிற்கமுடியாமல் இது சொல்லுகின்றோம்; இங்கு வந்திருப்பவர்கள் யாவரும் அந்தணர்களே; இவர்கட்கு நீ நாதனாயிருந்தும் அந்தோ! இவர்கள் அநாதர்கள்போல் மிக நலிவுறுகின்றனர்; இவர்களது தேகங்கள் அரக்கர்களால் அடிபட்டிருப்பதைக் காண்பாயாக; இங்ஙனம் வனத்தில் அரக்கர்கள் புரியும் நலிவுகளை நாங்கள் பொறுத்திருக்கவும் பரிஹரிக்கவும் வல்லமையற்றிருக்கின்றோம்; ராமா! இதற்காகவே நாங்களனைவரும் உன்னைச் சரணமடைகின்றோம்—அரக்கர்களிடமிருந்து எங்களைக் காத்தருள்வாய்' என்று.

### தண்டகாரணிய முனிவர்கட்கு அபயமளித்தது

இவ்வளவுங் கேட்ட இராமன் மிகவும் மனமிரங்கி அவர்களெல்லாரையும் நோக்கி 'முனிவர்காள்! எனக்கு நீங்கள் கட்டளையிடவேண்டுமேயல்லது என்பால் இங்ஙனம் வேண்டலாமோ? உங்களது கஷ்டங்களைத் தீர்ப்பது எனது சொந்தப் பிரயோஜனமாகும். தந்தை சொற்பேணுதலென்னும் வியாஜத்தினால் உங்கள் காரியத்தை நிறைவேற்றுதற்கே இவண் யான் விடைகொண்டிருக்கின்றேன்; உங்கட்கு இன்னல் விளைக்கின்ற அரக்கர்களையெல்லாம் நான் வதஞ்

செய்தொழிப்பது திண்ணம்' என்று சொல்லி அவர்கட்கு அபய மளித்துச் சென்றனன்—என்பது ஆருவது ஸர்க்கத்திலுள்ள கதை.

## இராமனளித்த அபயத்தைப் பிராட்டி மறுத்தல்

பிறகு ஒன்பதாவது ஸர்க்கத்திற் கதையாவது,—பிராட்டி இராமனை நோக்கிச் சொல்லலுற்ருள்; "நாதா! உலகில் மூன்று தீய செயல்கள் மிகக் கொடியனவாகச் சொல்லப்படுகின்றன; பொய் சொல்லுதல், பிறர் மனைவியை வேட்டல், பகையின்றிப் பரஹிம்ஸை செய்தல் என்னுமிம்மூன்றும் மிகக் கொடிய செயல்களாம்; இவற்றுள் முதலிரண்டு செயல்களை நீர் நெஞ்சாலும் நினைக்கமாட்டீரென்பதை நன்கறிவேன்; நீர் சத்தியசந்தர், ஏகபத்தினி விரதமுடையீர்; ஆனால், மூன்ருவதான தீய செயல் இப்போது உம்மிடத்தில் இடம் பெறத் தொடங்கியிருப்பது மிகவருந்தத்தக்கது. நீர் முனிவர்களைக் காக்கவேண்டி அரக்கர்களனைவரையும் கொன்றெழிப்பதாக வாக்குறுதியளித்தீர்; இதற்காகவே காட்டுக்கு வந்திருப்பதாகவும் தெரிவித்தீர்; இதுபற்றி நான் மிக வருந்துகிறேன். அரக்கர்கட்குமுமக்கும் நேராகப் பகையொன்றுமின்றியிருக்க அவர்களை நீர் கொல்ல விரும்புவதை நான் தருமமெனக் கொள்ளகில்லேன். முனிவர்கட்குத் தீங்கிழைக்கு மரக்கர்களைக் கொல்வது தருமமே யாகுமென்று நீர் கருதக்கூடும்; நீர் ராஜபதவியை வஹித்திருந்தால் அப்போது இது தருமமாகும்; க்ஷத்ரிய விருத்தியை விட்டுத் தாபஸ விருத்தியைக் கைப்பற்றியிருக்குமுமக்கு இது தருமமாகுமோ? "ஆழிசூ ழுலக மெல்லாம் பரதனே யாள நீபோய்த் தாழிருஞ்சடைகள் தாங்கித் தாங்கருந்தவ மேற்கொண்டு பூழிவெங்கான நண்ணிப் புண்ணிய புனல்களாடிவா" வென்று நியமிக்கப்பட்டுக் கானகம் வந்திருக்கின்ற நீர் ஆயுதத்தைக் கையால் தொடுவதே உரியதன்று; அரண்யவாசத்திற்குத் தவம் புரிதலே தகுந்தது. ஆயுதம் தரிப்பதால் கோபமுண்டாகிப் பரஹிம்ஸை செய்ய நேரிட்டுப் பாபமே சம்பவிக்கும். தரும நெறியிலே விருப்பமுடைய நீர் தவவொழுக்கத்தை மேற்கொள்வதே நலம்; உமக்குத் தெரியாததொன்றில்லை; பெண்பிறந்த நான் உமக்குத் தருமமுணர்த்துவதென்பது தகாததாயினும் உம்மீது இருக்குமன்பினுல் தெரிவித்துக்கொண்டேன்; நீர் இதனைத் தம்பியோடும் நன்கு ஆலோசித்து இஷ்டமானபடி செய்வீராக"—என்று.

## பிராட்டிக்குப் பெருமாளுரைத்த மறுமாற்றம்

இனி பத்தாவது ஸர்க்கத்தில் பிராட்டிக்கு மறுமாற்ற முரைக்கின்ற இராகவன் சொன்ன சொற்களில் மிகவும் ஸாரமான வொரு ச்லோகத்தையே இங்கெடுத்துக் காட்டுவோம்; (ஆரண். 10—19)

"அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம் த்வாம்வா ஸீதே ஸலக்ஷ்மணாம்,
ந து ப்ரதிஜ்ஞாம் ஸம்ச்ருத்ய ப்ராஹ்மணேப்யோ விசேஷத:"

ஆச்ரிதரக்ஷணத்தில் இராமபிரான் திடமான விரதமுடையவனென்பதை இந்த ச்லோகம் மிக நன்ருக எடுத்துக் காட்டுகின்றது. நம் போன்ற அகிஞ்சநர்கள் நிச்சலும் சிந்தை செய்யவேண்டிய சுலோக மிது. இந்த சுலோகத்தின் பொருளாவது: "ஸீதே! நான் என்னுயிரைவிட்டாலும் விடுவேன், உன்னையும் இலக்குமணனையும் விட்டாலும் விடுவேன்; ஆனால், ஒருவருக்குப் பிரதிக்ஞை செய்து கொடுத்து அதைத் தவறுவதென்பது முடியாது; அதிலும் பிராமணர்கட்குச் செய்த பிரதிக்கினையை எள்ளளவும் தவறமாட்டேன்" என்பதாம்.

இதற்குமேல் மற்ருெரு ச்லோகமு முள்ளது காண்மின்; [10—22]

"ஸத்ருசஞ் சாநுரூபஞ்ச குலஸ்ய தவ சாத்மந:,
ஸதர்மசாரிணீ மே த்வம் ப்ராணேப்யோபி கரீயஸீ"

'ஸீதே! நான் செய்ய நினைக்கும் தருமத்தையே நீயும் சங்கற்பிக்க வேண்டும்; வேருென்றை நீ நினைக்கலாகாது; இப்படிப்பட்ட தருமத்தை அனுட்டிக்கத் துணைபுரிவதற்காகவே யன்ருே உன்னை நான் மணம் புரிந்துகொண்டேன்; ஆகவே என்னுயிர்க்காதலியான நீ என் வழியொழுகுவதே உற்றது"—என்பது இந்த சுலோகத்தின் கருத்து.

ஆக, இராமபிரான் ஆச்ரிதரக்ஷணத்தில் திடமான வுறுதி உடையவன் என்பது இக் கதாசந்தர்ப்பங்களினுல் நன்கு விளங்கிற்று. மேல் யுத்தகாண்டத்தில் விபீஷணசரணுகதி ப்ரகரணத்திலுள்ள கதாசந்தர்ப்பத்தைக்கொண்டும் இதனை நிலை நாட்டுவோம்.

### விபீஷண கதாப்ரஸ்தாவம்

இராவணனுடைய மந்திராலோசனைக் குழுவில் விபீடணன் அவனுக்குப் பலவாறு ஹிதோபதேசங்கள் செய்தும். பலிக்கக் காணுமையாலே இராமபிரானுடைய திருவடி நிழலிலே யொதுங்கித் தான் வாழ்ந்துபோக நிச்சயித்துத் தன்னேடொத்த அன்புடைய நால்வருடன் கிளம்பிவந்து வானத்திலே நின்று வானர முதலிகளை நோக்கி, இராமபிரான் தன்னை அங்கீகரிக்குமாறு செய்யவேணுமென்று பெருமிடறுசெய்து ஓலமிட, அப்போது வானர வீரர்களில் சுக்கிரீவன் முதலானுர் இவனைச் சேர்த்துக்கொள்வது தகுதியற்றதென்று வலிதாக ஆக்ஷேபிக்க, அப்போது இராகவன் தனக்குள்ள ஆச்ரிதரக்ஷண பக்ஷபாதத்தையும் அதில் திடமான விரதத்தையும் எடுத்துரைக்குந் திறன் மிக வியக்கத்தக்கது. அதனை இங்குக் காட்டுவோம்.

## விபீடணன் பக்கல் காட்டிய உறுதி

அடைக்கலம் புகுந்த இவ்விபீஷணன் தக்ககாலத்தில் வந்திலனென்ருவது நல்லெண்ணத்தோடு வந்திலனென்ருவது கைவிடத் தக்கவனல்லன் என்பதைக் கூறத்தொடங்கின இராமன் இங்ஙனே கூறுகின்ருன் ;—இராவணன் சீதையைக் கவர்ந்து சென்று பலநாள்களாகியும் முன்னமே நம்மிடம் வந்து சேராமல் நாம் எதிரியோடு போர்புரியத் தொடங்கு மிச்சமயத்தில் நம்மிடம் வந்து சேரு மிவ் விபீடணன் நம்முடன் கலந்தவன்போன்றிருந்து நமது மருமங்களையெல்லா முணர்ந்துகொண்டு நம்மை வஞ்சனையாற் கொல்லுதற்காகத்தான் வந்தானேவென்று நீங்கள் கருதுவதற்கிடமில்லை. நன்மதி கூறித் தமையனை எப்படியாவது திருத்தலாமென்று இத்தனை நாளும் பலபடி முயன்று பார்த்தும் அது பலியாமற்போனதுமன்றி அவ்விராவணன் தன்னைக் கடிந்து கூறுதலுஞ் செய்யவே, இவன் தான் வாழவெண்ணியே நம்மிடம்வந்து சேர்ந்தனன் ; இவனை நான் ஒருவிதத்திலும்கைவிடகில்லேன்; இவனை அங்கீகரியாது கைவிட்டால் தான் நமக்கு நல்வாழ்வும் வெற்றியு முண்டாகுமென்று தேறினும் அஃது எனக்கு உடன்பாடன்று ; சரணுகதனைவிவனை அங்கீகரிப்பதனல் நமக்குத் தோல்வியே உண்டாவதாலும், அதற்குமேல் மரணமே நேர்வதானலும் அதுவே எனக்கு உடன்பாடாகும். நமக்கு வெகுநாளைப் பழக்கமில்லாமல் இப்பொழுதுதான் புதியவனக வந்தானென்ருவது மஹாபாதகி யென்ருவது குறை கூறி இவனை அங்கீகரியாது தள்ளி விடுதலை ஒருகாலும் நான் மனத்திற் கொள்ளேன் ; இவன் எப்படிப்பட்டவனுயிருந்தாலும் சரணமென்ற சொல்லைச் சொன்னதுவே காரணமாக, நெடுநாளைப் பழக்கமுள்ள நண்பன் போல விரும்பத்தக்கவனே யாவன். அங்கீகரிக்கப்பட்ட அவன் ஒருகால் நமக்குத் தீங்கிழைத்தானுலும் அதனல், சரணுகதனுக்கு அபயமளித்தோமென்னும் புகழ் நம்மை விட்டகலாது ; ஆகவே, இவனை நான் கைவிடகில்லேன் ;

## இராமன் கூறிய சிபிசக்ரவர்த்தியின் இதிகாசம்

அன்றியும், எங்கள் குலத்து இதிகாசமொன்று கேண்மின் ; சிபிசக்ரவர்த்தி அரசாளுகையில் அவனது மேன்மைக் குணத்தைப் பரிசோதிக்கும்பொருட்டு இந்திரன் பெரும் பருந்தாகவும் யமன் சிறு புருவாகவும் வடிவமெடுத்து அப்புருவைப் பருந்து துரத்திவர, அது சக்ரவர்த்தியைச் சரணமடைய, அன்னுன் அதற்கு அபயமளிக்க, பின்னே வந்த பருந்து 'என் இரையைக் கொடுத்திடு' என்று கேட்க, மன்னவன் ' அடைக்கலம் புகுந்தவரை ஆதரியாது விடுதல் அதிபாதகமாதலால் இதையன்றி எதைக் கேட்டாலுங் கொடுப்பேன்' என்ன,

பருந்து ‘இந்தப் புறுவின் எடையளவு தசையை உன் உடம்பினின்று அரிந்துகொடு’ என்ன, வேந்தன் சம்மதித்து உடனே தனது உடம்பி லுள்ள உறுப்புக்களை யெல்லாம் ஒவ்வொன்ருக அறுத்து வைத்தும் எடை ஒவ்வாதது கண்டு தானே தராசுத் தட்டிலேறி எடையை நிறைக்க, உடனே அத்தேவர்கள் ப்ரத்யக்ஷமாகிச் சக்ரவர்த்தியை மிகக் கொண்டாடி அவனது உடம்பு முன்போல நிறைவுறும்படி வர மளித்துப் போயினரென்று கேட்டிருந்ததுண்டு; அன்ன பெருமை வாய்ந்த சக்ரவர்த்தியின் வமிசத்திற் பிறந்த யான் இப்போது உங்களாலோசனையைக் கேட்டுச் சரணுகதனைக் கைவிடுதல் தகுதி யன்று; இவனைச் சேர்த்துக் கொள்வதனுல் எவ்விதமான அனர்த்தம் விளைவதாயினும் அஃதெனக்குப் புகழாகுமே யன்றிப் பழியாகாதாத லால் இவனை நான் கைவிடமாட்டேன்;

## இராமபிரான் கூறிய கபோதோபாக்கியானம்

ஒரு காட்டில் வேடனொருவன் ஒரு பெண் புறுவைப் பிடித்துத் தனது கைக்கூட்டிலிட்டுக்கொண்டு திரிகையில் பெருமழை வந்து இருட்டிக்கொள்ள அப்போது அவ்வேடன் நடுக்கலெடுத்து ஒரு மரத்தின் சார்பில் வருந்தி நிற்க, அச்சமயத்தில் அம்மரத்தின் மேலுள்ள ஆண்புறு தனது பெட்டையின் பிரிவையாற்ருது புலம்ப, அவ்வேடனது கைக்கூட்டில் அகப்பட்டிருந்த பெண்புறு அப்புலம் பலைக்கேட்டு வருந்தி ‘இதோ நான் இவ்வேடனது கைக்கூட்டில் முற் பிறவியின் தீவினைப்பயனுகச் சிறைப்பட்டுக் கிடக்கிறேன்; இதற்காக நீ வருந்தவேண்டா; நமது இருப்பிடம் வந்து வருந்தி நிற்கிற இவ் வேடனுக்குக் குளிர் முதலாகிய துன்பத்தை நீக்கி உதவிபுரிய வேணும்’ என்றுகூற, அதுகேட்ட ஆண்புறு அவ்வேடனுக்கு மனப் பூருவமாக உபசாரஞ் செய்யவிரும்பி, கொள்ளியொன்றை யெடுத்து வந்து சருகுகளின் மேல்வைத்து மூட்டி வேடனைக் குளிர்காயுமாறு சொல்லி, பின்பு அவன் பசியால் வருந்துவதைப் பார்த்து ‘அப்பா! நான் பறவையாயிருப்பதனுல் உன் பசிக்கு ஏற்ற பொருள் என்னிட மில்லையே; துன்பத்திற்கு இடமாய் எதற்கும் உதவாமலிருக்கிற இவ் வுடலைக் கொண்டு உன் ஆத்மாவைத் திருப்திசெய்துகொள்’ என்று சொல்லிக்கொண்டே மூண்டெரிகிற நெருப்பில் ஆனந்தத்தோடு விழுந்து அவனுக்கு உணவாகி முடிந்ததென்கிற கபோதோபாக்கி யானம் சுருதிகளிலுள்ளது. ஓர் அற்பப் பிராணியாகிய புறுவே தன் னிடம் வந்தடைந்தது காரணமாக, தன்மனைவியைக் கவர்ந்ததையும் பாராட்டாமல் தன்னையும் கவரக்கூடிய வேடனொருவனுக்கு உடலையு முயிரையுங் கொடுத்து உதவி செய்ததென்ருல், பேரறிவாளரென்று பேர்வைத்துக்கொண்டிருக்கிற நாம், நமக்கு யாதொரு தீங்குமிழைக் காமல் நம்மைச் சரணமென்றடைந்துள்ள விவனை ‘ஒருகால் நமது

உயிர்க்கு ஏதேனும் தீங்கு நேருமோ? என்று அஞ்சிக் காவாது கை விடுதல் தகுதியோ? தகாது; இவனை எவ்வகையினும் கைவிட மாட்டேன்; ஒருவன் செய்த நன்றியை மறந்த பாவியும், உண்மைப் பரம்பொருளான கடவுளை இல்லையென்று சாதிக்கின்ற நாஸ்திகனும் போலவே சரணமடைந்தாரைப் பாதுகாவாதவனும் நரகத்தில் நிச்சலும் வீழ்ந்து வருந்துவானென்பது நூற்கொள்கையாயிருக்க நானே இவனைக் கைவிடுவேன்? அரக்கரைக் கொல்வதாக நான் தேவர்கட்கு அபயமளித்தது இராவணன் சீதையைக் கவர்வா னென்பதை முன்னமே அறிந்தன்று; நம்மைச் சரணமடைந்தாரைக்காப்பதே நமது கடமை என்ற கருத்தினலேயே யாகும்; தண்டகாரணிய வாசிகளான முனிவர்களிடத்து "அடைக்கலம் புகுந்தவர்களைப் பாதுகாப்பதே எனதுகடமை" என்று அப்போது சொல்லிவிட்டு, இப்போது அதற்கு மாருக அபயம் வேண்டிவந்த இவ்விபீடணனைக் கைவிடுதல் எனக்கு உற்றதாகுமோ? ஆகாது; ஆதலால் இவனை நான் கைவிடகில்லேன்;

### வ்யாக்ரவாநரஸம்வாதத்தின் அநுவாதம்

காட்டிலே திரியாநின்ற வொரு வேடனைப் புலி துரத்திற்று. அவன் அதற்கு அஞ்சியோடிச்சென்று ஒரு மரத்தின் மீதேறிக் கொள்ள அங்கிருந்த வொரு பெருங்குரங்கு நல்வரவு கூறி ஆதரித்து வைத்துக்கொண்டது; மரத்தின் மீது ஏறமாட்டாத புலியானது மரத்தடியை விட்டுப்பெயராது நின்றது. நிற்கையில், அவ்வேடனது மடியில் கிடந்து உறங்கிப்போயிற்று குரங்கு; அப்போது புலி வேடனை நோக்கி 'இக்குரங்கை நீ கீழே தள்ளிவிடு, இதைக்கொண்டு என் பசியைத் தீர்த்துக்கொள்வேன்; உன்னை ஒன்றுஞ் செய்யாது விட்டிடுவேன்' என்று கூற, வேடன் அப்படியே குரங்கைக் கீழே தள்ளிவிட்டான்; புலியானது குரங்கை நோக்கி 'எனக்கு நரமாம்ஸத்தில்தான் அதிக விருப்பமுள்ளது; உன்னைக் கூற்றின்வாய் விழத் தள்ளின வேடனை எனக்கு நீ இரையாக்கி விடுவாயாகில் உனக்கு நான் உயிர்ப்பிச்சை தந்திடுவேன்' என்று சொல்ல, அக்குரங்கும் அங்ஙனமே செய்கிறேனென்றிசைந்து மரத்தின்மீதேறிற்று; வேடன் தன்னுயிர் தொலைந்ததாகவே திண்ணமாக வெண்ணி அஞ்சிநடுங்கிக் கிடந்தான்; குரங்கு அவனை நோக்கி 'அஞ்சேல் அஞ்சேல்!' என்று அபயமளித்து, புலியை நோக்கி 'என்னிடம் தேடிவந்தடைந்த சரணுகதனை நானே விட்டிடுவேன், விடுவேனென்று கனவிலும் நினையாதே' என்று சொல்லி வேடனைக் காப்பாற்றியதென்று கேட்டிருக்கிறோம்; அக்குரங்கிற்குள்ள மதிகூடவா நமக்கில்லாமற்போகவேண்டும்! ஒரு காலும் இவனை நான் கைவிடேனென்று சொல்லித் தன் உறுதியை வெளியிட்டனன் இராமபிரான். இப்பிரகரணத்தில் இராகவனுடைய

அமுதமொழியாக வான்மீகி முனிவர் காட்டியுள்ள சுலோகங்களில் இரண்டு சுலோகங்கள் உயிரானவை. அவை கேண்மின் ;

"மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் நத்யஜேயம் கதஞ்சந,
தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேததகர்ஹிதம்"

"ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே,
அபயம் ஸர்வபூதேப்யோ ததாமி ஏதத் வ்ரதம் மம"

என்னுமிவை ஸ்ரீராமசரமச்லோகங்களென்று குலாவப்படும். இராமபிரான் த்ருடவ்ரதன் என்பதை இவ்விரண்டு சுலோகங்களும் திடப்படுத்துவன. இவற்றுள் முந்தின சுலோகத்தில் *ந த்யஜேயம் கதஞ்சந என்பது உயிரானது ; பிந்தின ச்லோகத்தில் 'ஏதத்வ்ரதம் மம' என்பது உயிரானது. இவ்விரண்டு சுலோகங்களினுடையவும் இன்சுவைப் பொருள்களை வல்லார்வாய்க் கேட்டுணர்க.

ஆக, இராமபிரான் அடைக்கலம் புகுந்தவர்களைக் காத்தருளுந் திறத்தில் திடமான விரதமுடையவனென்பதை அப்பெருமானுடைய திருமுகப்பாசுரங்களினாலும் சரிதைகளினாலும் நிரூபித்தோமானோம்.

---

## 7. சாரித்ரேண ச கோ யுக்த:?

வான்மீகி நாரத ஸம்வாதத்தில் ஆறு வினாக்கள் கீழே விவரிக்கப்பட்டன. இனி சாரித்ரேண ச கோ யுக்த:? என்கிற ஏழாவது வினாவின் விவரணம் செய்வோம்.

### சாரித்ரமென்னுஞ் சொல்லின் பொருள் விளக்கம்

சாரித்ரமாவது நன்னடத்தை, நல்லொழுக்கம் ; அத்தோடு கூடியவன் யாவன் ? என்பது வினா. நல்லொழுக்கமென்பது பொதுப் பெயர். பெரியார்களைப் பணிதல், தந்தைதாய்பேணுதல், சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட கருமங்களை வழுவறச்செய்தல், தெய்வபக்தியுடைமை, பிறரை நலியாமை, பிறர்பொருள் தாரமென்றிவற்றைக் கவர நெஞ்சாலும் நினையாமை என்று இனையவொழுக்கங்களுக்குப் பொதுப்படையான பெயர் சாரித்ரமென்பது. சரித்ரமென்னுஞ் சொல்லே சாரித்ரமென நீண்டது. இவையெல்லாம் நாம் இராமபிரான் பக்கலில் செவ்வனே குடிகொண்டிருக்கு மழகை முறையே அநுபவிப்போம்.

**பெரியார்களைப் பணிதல் :—**உலகிலுள்ள மனிதர்களை நாம் மூன்று வகுப்பாகப் பிரிக்கலாம் ; நம்மைவிட மிகப்பெரியார், நம்மோடொத்தவர், நம்மைவிடத் தாழ்ந்தவர்கள் என்று. இம் மூவகுப்பில்,

நம்மைவிடத் தாழ்ந்திருப்பவர்கள் சிலரோ பலரோ இருப்ப தாகக் கொள்ளுவதற்கு நாம் உரிமையுடையோமல்லோம்; ஏனெனில், எல்லாரையுங் காட்டிலும் நாமே மிகச் சிறியோம் என்று அநுசந் தானம் செய்வதே நமது கடமையாகுமாதலால் நம்மைவிடச் சிறியார் சிலர் பலருளரென்று கொள்ளுதல் தகுதியற்றதேயாம்; ஆயினும் ஸம்ஸாரவாழ்க்கையில் நம்முடைய மக்கள், மற்றும் பணிவிடைக் காரர்கள் முதலானுரை நம்மைக்காட்டிலும் பெரியவர்களாகவோ நம் மோடொத்தவர்களாகவோ நாம் நினைப்பதில்லை, நினைப்பது தகுதியு மன்று; ஆகவே நம்மிலுங் கீழ்ப்பட்டவர்கள் என்கிற வொரு வகுப்பு கொள்ளத்தக்கதேயாம். ஆகவே, உயர்ந்தவர்கள் ஒத்தவர்கள் தாழ்ந் தவர்கள் என்று மூன்று வகுப்புக்கள் உள்ளனவாகக் கொள்வதில் குறையில்லை யென்பர்; இராமபிரான் உண்மையில் ஸ்ரீமந்நாராயண மூர்த்தியாகையாலே உலகமெல்லாம் அவற்கு அடிமைப்பட்டதான முறையில் கீழ்ப்பட்டிருக்குமேயல்லது அவனிலும் மேம்பட்டவரோ அவனேடொத்தவரோ ஒருவருமிருக்க ப்ரஸக்தியில்லை. ஆயினும் "ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தசரதாத்மஜம்" என்று மானிடவேடம் பூண்டு நடிக்குமிவ்வவதாரத்தில் தன்னில் மிக்காரையும் தன்னே டொத்தாரையும் திருவுள்ளத்திற் கொண்டிருப்பது காண்கிறேம். பெரியாரைப் பணிதல் என்கிற பரமதர்மத்தை யனுட்டித்துக் காட்டு தற்கென்றே இராமபிரானது திருவவதாரமென்று தெரிகிறது. இராமன் செய்திருக்கிற காரியம் எதுவாயினும் பெரியாருடைய நிய மனத்தைச் சிரமேற்கொண்டே செய்ததாகக் காண்கிறது. இதற்குச் சார்பாகச் சில விஷயங்களை யீண்டெடுத்துக் காட்டுவோம்;

## இராமன் செய்வனவெல்லாம் பெரியார் சொற்படியே

இராமன் செய்த செயல்களில் முதற்செயல் தாடகாவதம். பெண்கொலை பெரும் பாதகமென்று உலகம் பகரும். இஃது இராம பிரானறியமாட்டாததன்று. அறிந்திருந்தும் இப்பெண்கொலையை ஏன் செய்தனன்? சூர்ப்பணகைக்குச் செய்த அங்கபங்கத்தை தாடகைக்குச் செய்துவிட்டு, சூர்ப்பணகையை முடித்திருக்கலாமே; அவளை உயிரோடு விட்டதனுலல்லவோ அவள் இலங்கைக்கேகி இராவ ணனைத் தூண்டி ஸீதாபஹரணம் முதலிய கஷ்டங்களை விளைத்தனள். அவளுயிரையே மாய்த்திருந்தால் ஒரு வருத்தமுமில்லையே. தாட கையை அங்கபங்கஞ்செய்து துரத்தியிருந்தாலும் விச்வாமித்ர முனி வருடையவேள்வி இனிது முடிவு பெற்றிருக்குமன்றே. அவளைக் கொலை செய்திருக்கவேண்டிய அவசியமில்லையே. இப்படி பொருந் தாத செய்கைகளை இராமன் ஏன் செய்தனன்? என்று இத்தகைய கேள்விகளைப் பலர் கேட்பதுண்டு. விச்வாமித்ரமுனிவர் தாடகை யைக்காட்டி 'இவளைக் கொலைசெய்' என்று கட்டளையிடவேதான்

அது பெண்கொலை யென்றும் பாராது செய்தனன். சூர்ப்பணகை வந்தகாலத்து அவளை வதை செய்யுமாறு நியமிக்க அங்கு ஒரு பெரியாருமில்லாமை பற்றியே அவளைக் கொலை செய்யாது அங்கபங்கத்தோடு நிறுத்தினன். இதனால், பெரியார்களைப் பணிதலும் அவர்களதுகட்டளையின்படி நடத்தலுமே இராமனது விரதமென்றறியலாம்.

### இராமனது அருமையான வாய்மொழிகளிரண்டு காட்டுதல்

அன்றியும், இராமன் விச்வாமித்ர முனிவரை நோக்கி "இமௌ ஸ்ம முநிசார்தூல! கிங்கரௌ ஸமுபஸ்திதௌ, ஆஜ்ஞாபய யதேஷ்டம் வை சாஸநம் கரவாவ கிம்?" என்று கூறியுள்ளதும் குறிக்கொள்ளத்தக்கது: 'முனிவர் கோமானே! நானும் என் தம்பி இலக்குமனும் தேவரீர் ஏவின பணிவிடைகளைச் செய்யக்காத்திருக்கின்றோம்; நாங்கள் செய்யக் கூடியதைத் திருவுள்ளமானபடி கட்டளையிட்டருளலாம்' என வேண்டுதல் மேலே குறித்த ச்லோகத்திலுள்ளது. இதனாலும் பெரியாரைப்பணிதலிலேயே இராகவன் மிகுந்த குதூஹலம் வாய்ந்தவனென்பது நன்கு புலனாகும்.

இங்ஙனே பாலகாண்ட கதையொன்று காட்டினதுபோல முடிவான யுத்தகாண்டகதை யொன்றுங் காட்டிநிற்போம். இராவணவதம் முடிந்து அவனுக்கு ஈமக்கடனும் செய்தற்ற பின்பு விபீஷணாழ்வான் இராமனை நோக்கி வேண்டிக்கொண்டான்: "ஸ்வாமிந்! இலங்கையிற்புகுந்து இனிது வாழ்ந்து நன்னீராடி நல்லுடையுடுத்துச் சிரமபரிஹாரம் செவ்வனே செய்துகொண்டு புறப்படலாம்; இவ்வளவு அனுக்கிரகம் செய்தருளவேணும்" என்றான்; அதற்கு இராமன்,

"ந மே ஸ்நாநம் பஹுமதம் வஸ்த்ராணி ஆபரணாநி ச,
தம் விநா கைகயீபுத்ரம் பரதம் தர்மசாரிணம்"

[தம்பி பரதன் துடித்துக்கொண்டிருக்க எனக்கு இங்கு நீராட்டமோ பீதாம்பரமணிதலோ திருவாபரணம் பூணுதலோ எதுவும் எனக்கு ருசிக்கமாட்டாது] என்று சொல்லி, பரதனுக்குக் கெடுவிட்டுக் கொடுத்திருந்தபடி பதினான்கு வருடம் பூர்த்தியானதையுங் கொண்டு உடனே அயோத்திக்குப் புறப்பட்டேயாக வேணுமென்று சொல்லி விபீடணன் கொணர்ந்த புஷ்பகவிமானத்திலேறி அயோத்திக்குச் செல்லுகையில் பரத்வாஜமுனிவரின் ஆச்சிரமத்தில் அவரைக் காண நேரிட்டது; அப்போது அம்முனிவர் இராமனைநோக்கி 'இன்று நீ இங்கு நான் செய்கிற ஆராதனையை ஏற்றுக்கொண்டு நாளைக்குத் தான் அயோத்தி செல்லவேண்டும்' என்று கட்டளையிட, அதனை மீறமாட்டாது அதற்குக் குறுக்காக ஒரு பேச்சும் பேசாமல் அங்ஙனமே இசைந்திருந்தனன் என்பது யுத்தகாண்டம் நூற்றிருபத்தேழாவது ஸர்க்கத்தில் பேசப்பட்டுள்ளது. "பரத்வாஜஸ்ய சாஸநாத்"

என்று, அப்பெரியாருடைய கட்டளை இராமனுக்கு மீறவொண்ணுத தாயிருந்தது. இப்படி ஸ்ரீராமாயணத்தில் "பிதுர்வசந நிர்தேசாத்" என்றும் "விச்வாமித்ரஸ்ய வசநாத்" என்றும் "அகஸ்த்ய வசநாச் சைவ" என்றும் "பரத்வாஜஸ்ய சாஸநாத்" என்றும் இங்ஙனே பல பிரமாணங்களினுல் இராமனது செயல்களுக்கெல்லாம் பெரியார் களின் நியமனமே காரணமாகக் காட்டப்பட்டுள்ளது காண்க.

### இராமனது நடத்தையில் சங்காபரிஹாரம்

இதற்குமேல் ஒரு சிறு கேள்வி தோன்றும்; இராமன் இப்படி பெரியார்களின் சொல் தவருது நடப்பவனுயின் சித்திர கூடத் திற்கு வந்துசேர்ந்த வஸிஷ்டபகவான் ஜாபாலிமுனிவர் முதலான பெரியார்கள் அயோத்திக்கு மீண்டுவரும்படி வன்மையாகக் கட்டளை யிட்டும் இராமன் அதற்கு உடன்படாதது ஏன்? என்று. இதற்குக் கேண்மின். பெரியார்களில் தலைவரான தந்தையார் கட்டளையினு லல்லவோ இராமன் வனவாஸம் புறப்பட்டது;

"ஆழிசூ ழுலக மெல்லாம் பரதனே யாள நீ போய்த்
தாழிருஞ் சடைகள் தாங்கித் தாங்கருந் தவமேற் கொண்டு
பூழிவெங் கான நண்ணிப் புண்ணியப் புனல்க ளாடி
ஏழிரண் டாண்டின் வாவென்று"

அவர்களிட்ட கட்டளையை நிறைவேற்றியாகவேண்டியது ப்ராப்தம். இதற்கு மாருக வேறு பெரியார் வேறு கட்டளையிட்டால் அதனையும் நிறைவேற்றுவது நியாயமாகாது.

அப்படியானுல், வஸிஷ்டர் ஜாபாலி முதலான பெரியாருடைய பேச்சுக்கிணங்கி அயோத்திக்குத் திரும்புதலும், அயோத்தி சேர்ந்த பின் மற்றுஞ் சில பெரியார் வந்து 'இராமா! இப்படி நீ திரும்பி வந்தது தகுதியன்றே, தந்தை தாயர் கட்டளையை முற்றும் நிறை வேற்ருது மீண்டு வந்துவிடலாமா? திரும்பவும் கானகமே செல்வா யாக' என்று கூறினுல் அப்பெரியாரது வார்த்தைக்கிணங்கி மறுபடி யும் கானகம் புறப்படுதலும், மீண்டும் அங்குச் சில பெரியார்வந்து வேண்ட (அல்லது) நியமிக்க அயோத்திக்குத் திரும்புதலுமாய் ஒரு வியவஸ்தையில்லை யாகுமன்ருே! ஆகவே கீழே செய்த ஆக்ஷேபம் யுக்தமன்று.

### இராமபிரானது மாத்ருபக்தி

சாரித்ர மென்பதற்குப் பொருளாக நாம் கூறியவற்றில் முதற் பொருளை இவ்வளவாக விவரித்தோம். இனி இரண்டாவது பொரு ளான தந்தை தாய்ப் பேணுதல் என்பது தனிப்பட விவரிக்க வேண்டாததாயினும் சிறிதே விவரிப்போம். இராமனுக்குத்

தந்தைதாயரிடத்துப் பக்தி அபரிமிதமானது. உபநிஷத்தில் "மாத்ருதேவோபவ" என்று சொல்லிப் பிறகே "பித்ருதேவோபவ" என்று சொல்லியிருத்தலால் பித்ரு பக்தியிற் காட்டிலும் மாத்ருபக்தியே மிகச் சிறந்துவிளங்கும் இராமன் பக்கலில். அதிலும் பெற்ற தாயான கௌஸல்யையினும் மாற்றுத்தாயான கைகேயியிடத்தில் அதிக பக்திவாய்ந்தவன். இஃது எங்ஙனே தெரிகின்றதென்னில், வநவாஸஞ் செய்துகொண்டிருக்கையில் இளையோன் அடிக்கடி கைகேயிகைக் கடிந்து பேசுவன். பரதாழ்வானுடைய ப்ரசம்ஸையை இராமபிரான் செய்யுமளவில் "இப்படி மஹாகுணசாலியான பரதனுக்குக் கொடிய பாதகியான கைகேயி எங்ஙனம் மாதாவாய் வாய்த்தாளோ? என்று பேசத்தொடங்கி அந்த பரத ப்ரசம்ஸையைக் கைகேயி நிந்தனையில் கொண்டுமுடிப்பது லக்ஷ்மணனது வழக்கம். அப்போது இராமன் சொல்லும் வார்த்தை யாதெனில்,

"ந தேம்பா மத்யமா தாத! கர்ஹிதவ்யா கதஞ்சந,
தாமேவ இக்ஷ்வாகு நாதஸ்ய பரதஸ்ய கதாம் குரு"

என்றே சொல்லுவது. [லக்ஷ்மணா! நீயோ ஒரு விதத்திலும் கைகேயியை நிந்திக்கலாகாது; இக்ஷ்வாகு குலதிலகனான நம் தம்பி பரதனுடைய கதையை நீ எவ்வளவு சொன்னாலும் அவ்வமுதத்தையே செவியாரப் பருகுவேன்] என்பது மேலெடுத்த சுலோகத்தின் கருத்து. இதனால் மாத்ருபக்தி நன்கு விளங்கும்.

### இராமனது வர்ணாச்ரம தர்மப்ராவண்யம்

சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட கருமங்களை வழுவறச்செய்தலாகிற சாரித்ரம் இனி விவரிக்கப்படுகிறது. இக்ஷ்வாகு வம்சமானது ஆசாரப்ரதானமான குடி. அக்குடியில் தோன்றின இராகவன் அனுட்டானங்களில் தலைசிறந்தவன். வைதிக அனுட்டானங்களை வழுவறச்செய்தலில் இராமனுக்குள்ள ஊக்கம் இராமாயணத்திற்பல விடங்களில் பேசப்படுகிறது.

விச்வாமித்திரமுனிவன்பின்னே புறப்பட்டுச்சென்ற இராமன் ஓரிடத்தில் மாலைப்பொழுது வந்தவாறே சயனித்துக் கண்ணுறங்கினன்; பிறகு கதிரவன் குணதிசைச் சிகரம் வந்தணைந்து கனவிருளகன்று காலையம்பொழுதானவாறே அவனைத் திருப்பள்ளி யுணர்த்துகின்ற முனிவன்.

"கௌஸல்யாஸுப்ரஜாராம பூர்வா ஸந்த்யா ப்ரவர்த்ததே,
உத்திஷ்ட நரசார்த்தூல கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம்."

என்று சொல்லித் திருப்பள்ளியெழுச்சி பாடுகிறான். இந்த ச்லோகத்தில் ஈற்றடியான "கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம்" என்றது மிகவும் குறிக்

கொள்ளத்தக்கது. நித்ய கருமானுட்டானங்களைச் செய்வதில் இராமன் மிகுந்த மனவூக்கங் கொண்டிருந்தது பற்றியே கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம் என்று சொல்லியெழுப்புகிருன் முனிவன்.

ஸ்நாந ஸந்த்யாவந்தன பஞ்சமஹாயஜ்ஞாதி அனுட்டானங்களுக்கு ஆஹ்நிக மென்று பெயர்.

பகவத்கீதையில் கீதாசார்யன் "ந மே பார்த்தாஸ்தி கர்த்தவ்யம்......வர்த்தஏவ ச கர்மணி" என்றும்,

"யதி ஹ்யஹம் ந வர்த்தேய ஜாது கர்மணி அதந்த்ரித:
மம வர்த்மாநுவர்த்தந்தே மநுஷ்யா: பார்த்த ஸர்வச:"

என்றும் கர்மானுஷ்டானத்தில் தான் சோம்பாது ஊன்றியிருத்தலைச் சொல்லியுள்ளான். அது ராமாவதாரத்தில் கேட்கவேணுமோ? ஜாதிக்கும் ஆச்ரமத்திற்கும் ஏற்ற கருமங்களை யனுட்டித்துப் போருவதுதான் கர்மாநுஷ்டான மெனப்படுவது. "வர்ணாச்ரமாசாரவதா புருஷேண பர: புமாந், விஷ்ணுராராத்யதே பந்தா நாந்யஸ் தத்தோஷகாரக:" என்பது முதலான பலபிரமாணங்களில் வர்ணாச்ரமங்களுக்குரிய ஆசாரங்களில் சிறிதும் வழுவுதல் கூடாதென்று தெரிவிக்கப்படுகிறது. வர்ணமாவது—ப்ராம்மண க்ஷத்ரியாதி ஜாதி. ஆச்ரமமாவது—பிரமசாரியாகவோ க்ருஹஸ்தனுகவோ வநப்ரஸ்தனுகவோ ஸந்நியாசியாகவோ இருத்தல். இராமன் க்ஷத்ரியஜாதியிலே பிறந்தவன்; விச்வாமித்ரமஹாமுனி வேள்வியைக்காக்கப்போனபோது பிரமசாரி; பிறகு ஸீதையை மணந்து க்ருஹஸ்தாச்ரமம் பெற்றவன். இந்த ஜாதிக்கும் இந்த ஆச்ரமத்திற்கும் உரியனவாக அறநூற்களிற் சொல்லப்பட்ட கருமங்களைக் குறையறச் செய்தவனென்று இராமாயணத்தில் ஆங்காங்குத் தெரிவிக்கப்படுகிறது. பிராட்டியைப் பிரிந்து பரிதாபத்தோடு உழலுங்காலத்திலும் காலந் தவருது அந்தி தொழுதலை [ஸந்தியா வந்தனத்தை]ச் செய்துவந்தனுக வான்மீகி முனிவர் தெரிவிக்கின்ருர். யுத்தகாண்டம் 5-வது ஸர்க்கத்தின் முடிவு ச்லோகம்,

"ஆச்வாஸிதோ லக்ஷ்மணேந ராமஸ் ஸந்த்யாமுபாஸத,
ஸ்மரந் கமலபத்ராக்ஷீம் ஸீதாம் சோகாகுலீக்ருத:"

என்பது. இப்படி மற்றும் பல விடங்களிலும் சொல்லிற்றுண்டு.

பரதாழ்வான் இராமனை மீட்டுக்கொண்டு போவதற்காகச் சித்திரகூடத்தேற வரும்போது ஓமப்புகை கண்டு ராமாச்ரமம் ஸமீபித்துவிட்டதாக அறிந்து மகிழ்ந்ததாகச் சொல்லப்பட்டுள்ளது. [அயோ. 93—27. காண்க] ஸேனைகளைத் திரட்டிக்கொண்டு வருகின்ற பரதன்மீது அதிசங்கை கொண்ட லக்ஷ்மணன் இராமனிடம்

சொல்லுமிடத்து *அக்நிம் ஸம்சமயது ஆர்ய:* என்று ஹோமாக்னியை அணைத்துவிடும்படி சொல்லுகிறான்; ஓமப்புகையினால் ராமாச்ரமத்தின் வழியைத் தெரிந்துகொண்டு வருகின்ற பரதனுக்கு வழிதெரியாமற் போவதற்காக இங்ஙனம் சொல்லப்படுகின்றதென்று வியாக்கியானம் செய்துள்ளார்கள்.

இலங்கை செல்வதற்கு வழிவிடவேண்டி ஸமுத்ர ராஜனைச் சரணாகதி செய்யும்போது இராமபிரான் செய்த அனுட்டான விசேஷங்களையும், விபீடணன் இராமனை நோக்கிச் சரணாகதி செய்தபோது ஒரு அனுட்டானமும் செய்யாததையும் பற்றி விசாரம் செய்த நம் பிள்ளைபோல்வாரான ஆசிரியர்கள் இராமனுக்குள்ள ஆசார நிஷ்டையை எடுத்துரைக்கின்றார்கள். "வேல்வெட்டிப்பிள்ளைக்குப் பிள்ளையருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது" என்ற ஸ்ரீவசந பூஷண ஸ்ரீஸூக்தியை விவரித்தருளுமிடத்து மணவாளமாமுனிகள் அருளிச்செய்ததுங் காண்க.

## இடையே ஆக்ஷேபஸமாதானம்

நித்யநைமித்திக கருமங்களை விஷ்ணுபக்தர்களன்றோ செய்யவேண்டும்; விஷ்ணுதானும் செய்யவேணுமோ? என்று சிலர் கேட்கக்கூடும். "ஸ ஹி தேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி:, அர்த்திதோ மானுஷேலோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந:" என்ற வான்மீகத்தின்படி விஷ்ணுதானே இராமபிரானாக அவதரித்தானென்பது உண்மையேயாயினும் அவதார காலத்தில் ஏற்றுக்கொள்ளுகிற ஜாதிக்கும் ஆச்ரமத்திற்கும் தக்கபடி ஒழுகவேண்டியது அவசியமே.

## சாரித்ரமாவது தெய்வபக்தியுடைமை

இனி, தெய்வபக்தியுடைமையாகிற சாரித்ரம் விவரிக்கப்படுகிறது. ஸ்ரீமந்நாராயணமூர்த்தியாகிற பரதெய்வமே இராமனாக அவதரித்திருக்கச் செய்தேயும் லோகஸங்க்ரஹத்தை யுத்தேசித்து இராமன் தேவதாராதனம் செய்துகொண்டிருந்தது ஸ்ரீராமாயண ப்ரஸித்தம். இக்ஷ்வாகுவம்சத்தில் அநாதி காலமாக ஸ்ரீரங்கநாதனுடைய திருவாராதனம் நடந்துவந்து அந்தத் திருவாராதனத்தை இராமபிரானும் குறையற நடத்திவந்து, பட்டாபிஷேக ஸமயத்தில் பலர்க்கும் பரிசளிக்கும்போது அந்தத் திவ்யமங்கள விக்ரஹத்தை விபீஷணாழ்வானுக்குப் பரிசளித்ததாக ஸ்ரீராமாயணத்தினால் நன்கு தெரியவருகிறது. அயோத்யாகாண்டத்தில் (6—1) "ஸஹ பத்ந்யா விசாலாக்ஷ்யா நாராயண முபாகமத்" என்றுள்ளது. யுவராஜ பட்டாபிஷேகத்திற்கு உறுப்பாக ஸ்ரீராமனும் ஸீதையும் நாராயணனைத் தொழுததாகச்சொல்லிற்று. அடுத்தபடியாக "த்யாயந் நாராயணம்

தேவம்" என்றும் சொல்லிற்று. இங்கு நாராயணனென்றது தனக்கு ஆராத்யதேவதையான ஸ்ரீரங்கநாதனையே யென்பர் பூருவர்.

## ஸ்ரீராமபிரானுடைய தெய்வபக்தியாகிற சாரித்ரத்தின் விவரணம்

யுத்தகாண்டத்தில் (131—85) "லப்த்வா குலதநம் ராஜா லங்காம் ப்ராயாத் விபீஷண:" என்றவிடத்து வியாக்கியானத்திலும் ஸம்ப்ரதாயப் பொருளைப் பெரியார் விவரித்துள்ளார்கள். பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் நான்கு ச்லோகங்களினுல் இதனை வெகு அழகாக அருளிச்செய்கிருர்; பூர்வசதகத்தின் முடிவுச்லோகத்தில் "ஸ்ரீரங்கேந்தோ: பதகிஸலயே.............. ஹேமாம்போஜைர் நிபிட நிகடே ராமஸீதோபநீதை:" என்கிருர். த்ரேதாயுகத்தில் இராமனும் ஸீதையும் அர்ச்சனை செய்த புஷ்பங்கள் இற்றைக்கும் ஸ்ரீரங்கநாதனுடைய திருவடிச்சார்பில் திகழ்வதாக இந்தச்லோகத்தில் சொல்லப் படுகிறது. மேல் உத்தரசதகத்தில் "ஸர்க்காப்யாஸ விசாலயா நிஜதியா" என்கிற சுலோகத்தினுல், ஸ்ரீரங்கநாதன் நெடுங்காலம் நான்முகக்கடவுளால் ஆராதிக்கப்பட்டவனென்று தெரிவித்து, அதற்குமேல் "மநுகுலமஹீபால" என்னும் ச்லோகத்தில் "மைதிலீ ரமணவபுஷா ஸ்வேந ஸ்வார்ஹாணி ஆராதநாநி அஸி லம்பித:" என்று ஸ்ரீராம ஸீதைகளாலும் ஆராதிக்கப்பட்டவனென்று தெரிவித்து, அதற்கடுத்த ச்லோகத்தில், விபீஷணுழ்வானுக்குக்கிடைத்து நம்போலியர்க்கும் கிடைத்துவருவதை அறிவித்துள்ளார். ஆக இவ்வாற்ருல் ஸ்ரீராமபிரானுடைய தெய்வபக்தி மிக விளங்கும்.

## பிறரை நலியாமையாகிற சாரித்ரத்தின் விவரணம்

இனி, பிறரை நலியாமையாகிற சாரித்ரம் கேண்மின்; இளம் பிராயமேபிடித்து தாடகாதாட்கேய கரதூஷண லங்கேச்வராதி நிரஸனங்களை அபரிமிதமாகச் செய்திருக்கின்ற இராமபிரானிடத்தில் பிறரை நலியாமையென்னுங் குணம் நிரூபிக்கமுடியுமோவென்று சிலர் நினைக்கக்கூடும். தண்டிக்கத்தக்க குற்றவாளர்களைக் கடுமையாகத் தண்டிக்கின்ற அரசனையும், நோய் தீர்வதற்காக நோயாளிகளை சஸ்த்ரக்ஷார அக்னிகருமங்களினுல் துன்புறுத்துகின்ற மருத்துவனையும் பரஹிம்ஸாசீலர்களாகச் சொல்லுவார் யாருமில்லையன்ருே. அப்படியே "விநாசாய ச துஷ்க்ருதாம்" என்றும் "மண்ணின் பாரம் நீக்குதற்கே" என்றும் சொல்லுகிறபடியே துஷ்டர்களை சிக்ஷிப்பதற்கென்றே திருவவதாரம் செய்தருளின பெருமாள் பிறரை நலிவது குற்றத்தின்பாற்படாது. காரணமின்றிப் பரஹிம்ஸை செய்வதே பிரபல தோஷமாகக் கருதப்படுகின்றது. "வ்யஸநேஷு மநுஷ்யாணும் ப்ருசம் பவதி துக்கித:" என்று அயோத்யாநகர வாஸிகள் ஒருமிடருகக் கொண்டாடினபடி பிறர் துயருறக்கண்டு ஐயோவென்

றிரங்கு மியல்வினனை இராமனுக்கு பிறரைத் துயருறச் செய்வதாகிற குற்றம் வந்துபுக ப்ரஸக்தியேயில்லை.

சுகனென்னும் அரக்கன் கடற்கரையிலே ராமஸைன்யத்தில் வந்துபுகுந்து சில விஷமங்கள் செய்ய, வானரமுதலிகள் அவனை வதைக்கப்புக, கருணாமூர்த்தியான இராமபிரான் அவனை விடுவித்தருளினது யுத்தகாண்டம் இருபதாவது ஸர்க்கத்தில் விசதம்.

## இராமனுடைய ஏகதாரவ்ரதமாகிற சாரித்ரத்தின் சிறப்பு

இனி, பிறர் பொருள்தார மென்றிவற்றை நெஞ்சாலும் நினையாமை யென்னும் சாரித்ரத்தை இராமனிடத்து நாம் விவரிக்க வேணுமோ? வான்மீகிராமாயணம் ஆரணிய காண்டத்தில் ஒன்பதாவதுஸர்க்கம் முழுதும் இராமபிரானை நோக்கிப் பிராட்டி கூறும்வார்த்தைகள் மலிந்தது. அதில் இராமபிரானுடைய பிரமசரியமெனும் விரதத்தைப்பற்றி [அதாவது ஏகதாரவ்ரதத்தைப்பற்றி]ப் பிராட்டியே மிகமிகக் கொண்டாடிக் கூறுகின்றாள். உலகில், பொய் சொல்லுகை, பிறரை நலிகை, பிறர்பெண்டிரைக் காதலிக்கை என்னு மிம்மூன்று குற்றங்களுக்குத் தப்பிப் பிழைப்பது அரிதென்றும், பொய் சொல்லுகையும், பிறர்பெண்டிரைக் காதலிக்கையும் இராமனிடத்துச் சிறிதும் கிடையாதென்றும் உகந்து கூறுகின்றாள் ஸீதை. விசேஷித்துப் பிறர்பெண்டிரைக் காதலிக்கை சிறிதும் கிடையாதென்பதை நாலைந்து சுலோகங்களினால் அடுத்தடுத்துச் சொல்லியுள்ளாள். இராமனுடைய ஜிதேந்த்ரியத்வத்தை மற்றையோர் சொல்லுவது கிடக்க; பிராட்டி திருவாக்கினால் இப்படிக் கொண்டாடிக் கூறியிருப்பதுதான் விசேஷம்.

## ப்ரக்ருத விஷயத்தில் ஆக்ஷேபங்கள்

ஆனால், இதற்கு மாறாக ஸ்ரீராமாயணத்தில் இரண்டிடங்கள் காணப்படுகின்றன. இங்ஙனம் கொண்டாடிக் கூறின பிராட்டி தானே மேல் ஸுந்தரகாண்டத்தில் இருபத்தெட்டாவது ஸர்க்கத்தில் (தன்னுயிரைத் தானே மாய்த்துக்கொள்வதாகத் துணிந்து) பலவும் சொல்லிப் புலம்புகையில் பதினான்காவது சுலோகம் எடுத்துரைக்கத் தகாதபடி விழுந்திருக்கிறது. அந்த சுலோகம் வருமாறு;—

"பிதுர் நிதேசம் நியமேந க்ருத்வா வநாத் நிவ்ருத்தச் சரிதவ்ரதச் ச,
ஸ்த்ரீபிஸ் து மந்யே விபுலேக்ஷணாபிஸ் த்வம் ரம்ஸ்யஸே வீதபய: க்ருதார்த்த:"

இதன் பொருள் யாதெனில், (இராமனைத் தன்மனத்தினுள் விளித்துக் கூறுகின்ற வார்த்தை இது.) 'இராம! நீர் தந்தையாருடைய கட்டளையை வழுவற நிறைவேற்றிவிட்டுக் காட்டில் நின்றும் நாடு சென்று

சேர்ந்து தடங்கண்ணியரான பல மாதர்களோடு நிர்ப்பயமாக ரமிக்கப்போகிறீர்' என்பதே இந்த சுலோகத்தின் கருத்து. பிராட்டியின் வாக்கில் இப்படியும் வரத்தகுமோ?

மற்றோரிடமுங் கேண்மின்; யுத்தகாண்டம் இருபத்தோராவது ஸர்க்கத்தில் இராகவன் கடற்கரையில் ஸமுத்ரராஜனை நோக்கிச் சரணுகதி செய்தவாற்றைக் கூறுகின்ற வான்மீகி முனிவர், அப்போது இராகவன் தன்னுடைய ஒரு திருக்கையைத் தலையணையாக வைத்துக்கொண்டபடியைக் கூறுகையில் அந்தத் திருக்கைக்கு விசேஷணமிடுகிறுர் (ச்லோ-3.) "புஜை: பரமநாரீணும் அபிம்ருஷ்டமநேகதா" என்று. இராமனது திருக்கையானது உயர்ந்த பல ஸ்த்ரீகளின் கைகளினல் பன்முறையும் தடவிக்கொடுக்கும் பாக்கியம் பெற்றது என்பதாக இங்குக் கூறப்படுகின்றது. இது ஸம்பாவிதமோ? நெஞ்சாலும் நினைக்க வொண்ணுததன்றோ இது.

நாரதமுனிவரிடம் ஸ்ரீராமனது திருக்குணங்களை நன்கு கேட்டுணர்ந்தவர் வான்மீகிமுனிவர்; உபதேசம் தந்த அந்த நாரத முனிவர் இராமனைப்பற்றி வாய்திறக்கும்போதே **நியதாத்மா** என்று இவனது ஜிதேந்திரியத்வத்தையே எடுத்துரைத்துள்ளார். இங்ஙனம் கேட்டிருந்தும் "**புஜை: பரமநாரீணும் அபிம்ருஷ்டமநேகதா**" என்று தம் வாயால் எங்ஙனம் கூறினர்? என்று விமரிசிக்க வேண்டியது அவசியமே.

## மேலேகாட்டிய ஆக்ஷேபங்களுக்குப் பரிஹாரம்

மேலே யெடுத்துக்காட்டிய இரண்டிடங்களைப் பற்றியும் தெளிவு பிறப்பிக்கிறோம். ஸுந்தரகாண்டத்தில் "ஸ்த்ரீபிஸ்து மந்யே விபுலேக்ஷணுபிஸ் த்வம் ரம்ஸ்யஸே வீதபய: க்ருதார்த்த:" என்று பிராட்டி சொன்னதற்குக் காரணம் கூறுகின்ற சிலர்—"உயிரை விடுவதாக நிச்சயித்தகாலத்தில் துக்கம் பொறுக்கமாட்டாமல் தன்னை மறந்து ஏதேதோ சொல்லுகிறுள்; இதற்கு அர்த்தமேகிடையாது; இதனல் இராமபிரானுடைய ஜிதேந்த்ரியத்வத்திற்கு யாதொரு குறையும் நேராது" என்கிறுர்கள். இது ஸமாதானமாகமாட்டாது. நமக்குத் தோன்றுவதை எழுதுகிறோமிங்கு; புருஷர்களுக்கு எத்தனை தடவை வேணுமானுலும் புநர் விவாஹம் செய்து கொள்ளு மதிகாரத்தை சாஸ்த்ரம் இசைந்திருப்பதனல் அதைக்கொண்டுசொல்லுகிறுள் பிராட்டி; 'இராம! நீர் அயோத்திமாநகர் சென்று சேர்ந்தால் உமக்கு நானில்லையானுலும் உமக்குப் பெண்கொடுப்பாரில்லையோ? உடனே விவாஹம் செய்துகொள்வீர்; அவளோடும் இப்படிக் காட்டுக்கு வந்து அவளையும் ஒரு ராக்ஷஸன் கவர்ந்துசெல்லப் பார்த்திருப்பீர்; மறுபடியும் நகரம் சேர்ந்து மீண்டும் விவாஹம் செய்துகொள்வீர். இப்படி யதேஷ்டமாக விவாஹங்கள் செய்துகொண்டு நீர்

இனிதுவாழ்வீர்; ஆணாய்ப் பிறந்தவர்க்கு என்ன குறை?' என்று சொல்லுகிறபடியே யல்லது இராமனது ஏகதாரவ்ரதத்திற்குப் பங்கமாகச் சொல்லுகிறபடியன்று; அப்படி பிராட்டி நெஞ்சாலும் நினைக்க ப்ரஸக்தியில்லையன்றோ.

இனி யுத்தகாண்டத்தில் "புஜை: பரமநாரீணாம் அபிம்ருஷ்ட மநேகதா" என்றவிடமும் நன்கு பொருந்துமதே. உண்மையில் பராத்பரனான ஸ்ரீமந்நாராயணன் தான் ஸர்வலோகசரண்யனாயிருந்து வைத்து அந்தோ! இப்படி ஒரு க்ஷுத்ரனை நோக்கிச் சரணாகதி செய்வதே! என்கிற பரிதாபம் வான்மீகிமுனிவருடைய உள்ளத்தில் உறைந்திருப்பதால், இராமன் பராத்பரன் என்பதைத் தாம் அநுஸந்தித்துச் சொல்லுகிற வார்த்தை இது. இங்கு "பரமநாரீணாம்" என்றது பரஸ்த்ரீகளைச் சொன்னபடியன்று; "உடனமர் காதன்மகளிர் திருமகள் மண்மக ளாயர்மடமகள்" என்று நம்மாழ்வாரும், "தேடித் திருமாமகள் மண்மகள் நிற்ப" "தக்கார்பலர் தேவிமார் சால வுடையீர்" என்று திருமங்கையாழ்வாரும், "மஹீ தேவ்யஸ் ஸஹஸ்ரம் ததா" என்று (ஸ்ரீ குணரத்நகோசத்தில்) பட்டரும் அருளிச்செய்தபடியே ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவி முதலான திவ்ய மஹிஷிகளையே சொன்னபடி. முந்துற முன்னம் காட்டின ஸுந்தர காண்ட ச்லோகத்திற்கும் இக்கருத்தையே கொள்வதும் குறையற்றதே. ஆக, இராமனுடைய ஜிதேந்த்ரியத்வத்திற்கு ஒரு வகையிலும் குறைகூற இடமில்லை யென்க. இவ்வளவாக "சாரித்ரேண ச கோ யுக்த:?" என்கிற வினா விவரிக்கப்பட்டு முடிந்தது. .... .... *

---

## 8. ஸர்வபூதேஷு கோ ஹித:?

### ஸாமாந்யமாக ப்ரியஹிதங்களின் விவரணம்

வான்மீகி நாரத ஸம்வாதத்தில் "ஸர்வ பூதேஷு கோ ஹித:" என்கிற எட்டாவது வினா இனி விவரிக்கப்படுகின்றது. உலகில் நம்மிடம் அன்புள்ளவர்களை இரண்டு வகையாகப் பார்க்கிறோம். சிலர் ப்ரியபரர்களாயிருப்பர்கள், சிலர் ஹிதபரர்களாயிருப்பர்கள். ப்ரியமென்றால் என்ன? ஹிதமென்றால் என்ன? என்பதை முன்னம் தெரிந்துகொள்ளவேண்டும். தற்காலத்தில் இனிமையாயிருப்பது எதுவோ அது ப்ரியமெனப்படும்: தற்காலத்தில் இனிதாகவல்லாமல் வெறுக்கத்தக்கதாயிருந்தாலும் பிற்காலத்தில் மிக்க நன்மை பயக்கக்கூடியதாக இருப்பது எதுவோ அது ஹிதமெனப்படும். முறையே, சர்க்கரைப்பொங்கலையும் வேப்பிலையுருண்டையையும் உதாரணமாகக் கொள்ளலாம். சர்க்கரைப் பொங்கல் உண்ணப்படும்போது மிக இனிதாகவேயுள்ளது. ஆனால், அது பிற்காலத்தில்

விளைக்கும் கஷ்டம் தெரியமாட்டாது. வேப்பிலையுருண்டை, விளக்கெண்ணெய் முதலியன உட்கொள்ளப்படும்போது ப்ரியமாக இருக்கமாட்டா. ஆயினும், அவை பிற்காலத்தில் மிக்க நன்மை பயப்பனவென்பது அநுபவஸித்தமாதலால் அவை ஹித மென்கிற வகுப்பில் சேர்க்கப்படுகின்றன. தற்காலத்தில் நமக்குத் துன்பந் தருமவையான எல்லாமும் ஹித மென்று கொள்ளப்படமுடியாது; தேள்கொட்டுவது, பாம்பு கடிப்பது, கள்ளர் அடித்துப்பறிப்பது முதலானவை துன்பந்தருபவையே; ஆனால், இவற்றால் பிற்காலத்தில் நன்மையொன்றும் காணமுடியாதாதலால் இவை கஷ்டங்கள், ஆபத்துக்கள் என்கிற வகுப்பில்சேருமேயல்லாது ஹிதமென்னக் கூடியவையல்ல. ஆனாலும், இதைப்பற்றியும் ஆராய்ச்சிமுறையில் சொல்லத்தக்க விஷயமுண்டு; அதைப் பிறகு சொல்லுவோம்.

## உலகில் தாய்தந்தையரின் ப்ரியஹிதபரத்வம்

குடும்பத்தில் தாயாருடைய செயலையும் தகப்பனுருடைய செயலையும் பார்க்கிறோம். தாயாரை ப்ரியபரையென்றும் தகப்பனுரை ஹிதபரரென்றும் பொதுவாக யாவரும் சொல்லுவர். தகப்பனுர்க்கு நம்மைத் தண்டிப்பதிலேயே முழுநோக்குக் காணப்படும். தாயாரும் சிலஸமயங்களில் சினம் மிகுந்து தண்டிப்பதுண்டாகிலும் பெரும்பான்மையாகத் தாய்மார் மக்களின் முகங்கன்றக் காணமாட்டார்கள். ஆகவே, மக்களுக்கு ப்ரியஞ்செய்வதிலேயே தாய்மார் நோக்குடையர்; ஹிதஞ்செய்வதிலேயே தந்தையர் நோக்குடையர் என்று பெரியார் கூறுவர். அனுபவமும் இதை யொட்டியேயுள்ளது.

"மேலாத் தாய்தந்தையும் அவரேயினி யாவாரே" என்றும் "தஞ்சமாகிய தந்தைதாயொடு தானுமாய்" என்றும் "தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் முற்றுமாய்" என்றும் ஆழ்வாரருளிச்செய்துள்ளபடி எம்பெருமான் நமக்குத் தாயாயுமுளன் தந்தையாயுமுளன். "மாதா பிதா ப்ராதா நிவாஸச் சரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண:" என்று வடமொழியுபநிடதங்களுமோதுகின்றன. ஆகவே, எம்பெருமான் நமக்குத் தாயாயிருக்கும் முறையைக் கொண்டு ப்ரியங்களையும் செய்யக்கடவன்; தகப்பனுயிருக்கும் முறையைக் கொண்டு ஹிதங்களையுஞ் செய்யக்கடவன். ப்ரியங்களைச் செய்வதுபற்றி இங்கு விசாரமில்லை. அப்ரியமான ஹிதங்களைச் செய்வதுபற்றியே "ஸர்வபூதேஷு கோ ஹித:?" என்னும் வினு விளைந்திருக்கின்றது.

## பெருமாள் திருமொழியில் விவரித்த ஹிதபரத்வநிரூபணம்

பெருமாள் திருமொழியில் குலசேகராழ்வார் எம்பெருமானது ஹிதபரத்வத்தைத் "தருதுயரந்தடாயேல்" என்கிற ஐந்தாவது பதி

கத்தில் பல திருஷ்டாந்தங்களை யெடுத்துக்காட்டும் முகத்தால் மூதலிக்கின்றார். அவற்றுள், மூன்று நான்காம் பாசுரங்களிலுள்ள இரண்டு திருஷ்டாந்தங்களை மாத்திரம் இங்குக் கொள்வோம். "தானேக்காதெத்துயரஞ் செய்திடினும் தார்வேந்தன் கோல்நோக்கி வாழுங் குடிபோன்றிருந்தேனே" என்றும் "வாளாலறுத்துச் சுடினும் மருத்துவன்பால் மாளாத காதல் நோயாளன்போல்" என்றும் அருளிச்செய்திருக்கின்ற இரண்டு திருஷ்டாந்தங்கள் குறிக்கொள்ளத்தக்கவை. அரசன் குற்றவாளர்களான குடிமக்களுக்குத் தண்டனைகள் புரிவது ஹிதபுத்தியினாலே; மருத்துவன் நோயாளிகளுக்குப் பலவகைக் கஷ்டங்களை யிழைத்து சிகித்ஸை செய்வதும் ஹிதபுத்தியினாலே. இப்படி பகவானும் பக்தர்களுக்குக் கஷ்டங்களையும் துயரங்களையும் தருவது ஹிதபுத்தியினாலே என்று சாஸ்திரங்கள் முறையிடுகின்றன.

இவ்விஷயத்தை வடமொழிப் புல்வர்களும் "ஹரிர் துக்காநி பக்தேப்யோ ஹிதபுத்த்யா கரோதிவை, சஸ்த்ரக்ஷாராக்நிகர்மாணி ஹிதபுத்த்யா யதா பிஷக்" என்னும் சுலோகத்தினால் கூறிவைத்தனர். கத்தியினாலறுத்தல் காரம்வைத்தல் நெருப்பினால் சூடுபோடுதல் முதலான பொறுக்கொணாத் துயரப் பணிகளை மருத்துவன் ஹிதபுத்தியினால் செய்வது போலவே பகவானும் பக்தர்களுக்கு ஹிதபுத்தியினாலேயே துக்கங்களை விளைவிக்கிறான் என்பது மேலே குறித்த சுலோகத்தின் கருத்து.

**ஹிதபரத்வ விஷயமாக தத்வத்ரய ஸ்ரீஸூக்தி விவரணம்**

தத்வத்ரய மென்னும் ரஹஸ்யத்தில் ஈச்வரப்ரகரணத்தில், லோகாசாரியரருளிச்செய்யும் அற்புதமொழிகளையுங்காணீர்;—

> "சிலரை ஸுகிகளாகவும் சிலரை துக்கிகளாகவும் ஸ்ருஷ்டித்தால் ஈச்வரனுக்கு வைஷம்யநைர்க்ருண்யங்கள் வாராதோ வென்னில்; கர்மமடியாகச் செய்கையாலும், மண்தின்ற ப்ரஜையை நாக்கிலே குறியிட்டு அஞ்சப்பண்ணும் மாதாவைப்போலே ஹிதபரனாய்ச் செய்கையாலும் வாராது" என்று.

இந்த ஸ்ரீஸூக்திகளின் கருத்தாவது—பகவான் சேதநர்களுக்குக் கரணகளேபரங்களைக் கொடுக்கையாகிற ஸ்ருஷ்டியைச் செய்யும்போது எல்லா ஆத்மாக்களையும் ஒரேவிதமாகப் படைக்காமல் சிலரை இன்பம்மிக்கவர்களாகவும் சிலரைத் துன்பம்மிக்கவர்களாகவும் படைக்கிறானே, இதனால் அவ்வீச்வரன் குற்றவாளனாகானோ வென்னில்; ஆகான்; நோயை விளைக்கும்படியான மண்ணை விரும்பித்தின்ற தன் குழந்தையை இனி மண் தின்னாதபடி நாக்கிலே சூடிட்டு மண் தின்ன அஞ்சும்படி பண்ணும் ஹிதபரையான மாதாவைப்போலே இவர்கள் மேன்மேலும் தீய கருமங்களைச் செய்ய அஞ்சும்படி ஹிதபரனாய்ச் செய்கையாலே—என்றபடி.

## இராமபிரான் பக்கலில் ஹிதபரத்வ நிரூபணம்

ஆக, இவ்வளவாலும், எம்பெருமான் ஹிதபரனுயிருக்கும்படியும் அது அடியாக அவன் செய்யுமதும் நிரூபிக்கப்பட்டது. இனி இதனை இராமபிரானிடத்திலே காட்டியநுபவிப்போம். இராமனை கருணையே வடிவெடுத்த காகுத்தனென்று கொண்டாடுகிருர்கள். பிறர் நோவு கண்டு ஐயோ வென்றிரங்குமவனை இராமபிரானும் பிறர்க்குக் கஷ்டங்களை விளைத்தமை காண்கிறோம். அரக்கர் குலங்களுக்குத் துக்கங்களை விளைத்தானென்பது பற்றி இங்குச் சொல்லவில்லை; அந்தரங்க பக்தர்களாகக் கொள்ளப்பட்டவர்களுக்குங்கூட கஷ்டங்களை விளைத்ததாகக் காண்கிறோம்; அது கூடுமாவென்று பலர்க்கும் சங்கை தோன்றுவதுண்டு; இதற்கு ஓரிடமே யெடுத்துக் காட்டுகிறோம்.

## ஸுக்ரீவன்பால் காட்டிய நிக்ரஹம்

மழைக்காலம் கழிந்தவளவிலும், முன்பு சொன்னபடி சுக்கிரீவன் சேனைகளுடன் வந்திலனென்று திருவுள்ளத்தில் மிக்க சீற்றங் கொண்ட இராமபிரான் இளையோனையழைத்து, சுக்ரீவனிடம் சொல்லுமாறு கூறினவார்த்தைகள் கொடுமையே வடிவெடுத்தவையாயிருக்கின்றன. இங்குக் கம்பராமாயணச் செய்யுள்கள் சிலவற்றை யெடுத்துக் காட்டுவோம்;

> "பெறலருந் திருப்பெற் றுதவிப்பெருந்
> திறன் நினைந்திலன் சீர்மையின் தீர்ந்தனன்
> அறம் மறந்தனன் அன்புசிடக்கநம்
> மறனறிந்திலன் வாழ்வின் மயங்கினுன்"

(இதன்கருத்து.) பெறுதற்கரிய அரசாட்சிச் செல்வத்தைச் சுக்கிரீவன் நம்மாற் பெற்றிருந்தும், தனக்கு நாம் செய்த அவ்வுபகாரத்தின் பெருமையைச் சிறிதும கருதிற்றிலன். சிறந்த வொழுக்கத்தினின்று நீங்கிவிட்ட தன்மையை நன்கு காட்டிவிட்டான். நாம் அவன்பக்கல் செய்த அன்பை அவன் மறந்தது கிடக்கட்டும்; நமது பலபராக்கிரமங்களையுமன்றே நெஞ்சிற்கொள்ளாது மறந்துவிட்டான்; அரசாட்சியேற்று இன்புற்று வாழும் வாழ்க்கையில் மயங்கிப்போயினன்.

> "நன்றி கொன்றுஅரு நட்பினை நாரறுத்து
> ஒன்று மெய்ம்மைசிதைத்து உரைபொய்த்துளான்
> கொன்று நீக்குதல் குற்றத்தின் நீங்குமால்
> சென்று மற்றவன் சிந்தையைத் தேர்குவாய்"

இவ்வாறு தான் பெற்றவுதவிக்குக் கைம்மாறுசெய்யாமல் அதனை மறந்திட்டு அருமையான நட்பையுமொழித்து யாவர்க்கும் ஏற்றதான

சத்தியத்தையுமழித்துப் பேச்சுத் தவறியவனைக் கொன்றொழிப்ப தானது பழிபாவமற்ற செயலேயாகும்; ஆதலால் அச்சுக்கிரீவனைத் தண்டிக்கவேண்டி நீ சென்று அவனது எண்ணத்தையறிந்து வருக.

"வெம்பு கண்டகர் விண்புக வேரறுத்து
இம்பர் நல்லறஞ் செய்ய எடுத்தவில்
கொம்பு முண்டு அருங் கூற்றமுமுண்டு, உங்க
ளம்பு முண்டென்று சொல்லு நம் மாணையே"

துஷ்ட நிக்கிரகஞ் செய்து இவ்வுலகில் தருமத்தை நிலைநாட்டுதற் பொருட்டு நாம் கையிலேந்திய வில் வாலியோடு தொலைந்திலது; இன்னமு முள்ளது; யமதருமராசனுமுளன்; வானரவீரர்களாகிய உங்களையுங் கொல்லவல்ல அம்பும் நம்மிடமுண்டு; என்றிங்ஙனம் நமது கட்டளையாகச் சுக்கிரீவனிடம் சொல்லுக.

"ஊரு மாளும் அரசும் நுஞ்சுற்றமும்
நீரு மாளுதி ரென்பது நேர்ந்தநாள்
வாரும் வாரலிரா மெனின் வானரப்
பேரும் மாளுமெனும் பொருள் பேசுவாய்"

கிஷ்கிந்தாபுரியும் குடிகளும் அரசாட்சியும் உங்கள் உறவினமுமாக இவ்வுலகத்தில் நெடுநாள் விளங்க விருப்பமுண்டாகில் உடனே புறப்பட்டு நம்பக்கல் வருக; அங்ஙனம் வராமற்போனல் வானரமென்கிற பெயரும் உலகத்தில் இல்லாதொழியுமென்கிற வுண்மையை நீ சென்று தெரிவிப்பாயாக என்று சொல்லியனுப்புகிறார் பெருமாள்.

வான்மீகி ராமாயணத்திலும் கிஷ்கிந்தாகாண்டத்தில் முப்பதாவது ஸர்க்கத்தில் இவ்விஷயம் காணலாம்; இராமபிரான் அங்குக் கூறும் வார்த்தைகளாவன—"லக்ஷ்மணா! சுக்கிரீவன் நம்மால் விரோதி தொலையப்பெற்றுத் தன்னுடைய வாக்குறுதியை அடியோடு மறந்து மன்மதவிகாரங்களினால் காலங்கழிக்கின்றனன்; இப்போது மழைக்காலம் கழிந்துவிட்டபடியால் அரசர்கள் படையெடுக்குஞ்சமயமன்றோவிது; சுக்கிரீவன் செய்ந்நன்றி மறந்த காதகனாகத் தோன்றுகின்றனனே; நீ உடனே சுக்கிரீவனிடஞ் சென்று 'நன்றியறிவுகெட்ட பாபிஷ்டன் புருஷர்களிற் கடையனாவன்; அவன் மாண்டபின்புகூட அவனது சரீரத்தை மாமிசந்தின்னும் ஜந்துக்களும் தின்னமாட்டா' என்றுரைப்பாயாக. லக்ஷ்மணா! மராமரங்களை யெய்து வாலியைக் கொன்றதனால் என் பராக்கிரமத்தைச் சுக்ரீவன் நன்கறிந்திருந்தும் அந்தோ! சிறிதும் அஞ்சாதிருக்கின்றனன்; வாலி சென்ற வழி அவனுக்கும் திறந்திருக்கின்றதென்பதை

அவனிடம் கூறுவாயாக. அவனைச் சுற்றத்தோடும் யமபுரமனுப்ப நான் சித்தமாயிருத்தலைத் தெரிவிப்பாயாக" என்பனவாம்.

ஸுக்ரீவ நிக்ரஹத்தில் ஆக்ஷேப ஸமாதானங்கள்

இங்ஙனம் கூறுதலும் த்ரோஹபுத்திகொள்ளுதலும் தண்ணளியே வடிவெடுத்த இராமபிரானுக்குத் தகுமோ? அக்னிசாக்ஷியாகக் கொள்ளப்பட்ட உயிர்நண்பனன்றோ சுக்கிரீவன். அவனிடத்து இவ்வளவு த்ரோஹசிந்தனை கொண்டது என்னே?

அன்றியும், அயோத்யாகாண்டம் முதல் ஸர்க்கத்தில் (11.)

"கதஞ்சிதுபகாரேண க்ருதேநைகேந துஷ்யதி
ந ஸ்மரத்யபகாராணும் சதமபி ஆத்மவத்தயா."

என்று இராமபிரானது குணம் ஆச்சரியமாகக் குலாவப்பட்டுள்ளது. பிறர் நூற்றுக்கணக்கான தீங்குகள் செய்தாலும் அவற்றை நெஞ்சினுலும் நினைப்பதில்லை யென்றும், புத்திபூர்வகமாகவோ அபுத்திபூர்வகமாகவோ ஒருவர் மிகச்சிறிய வுதவி ஒன்று செய்தாலும் அதுகொண்டு மகிழ்ந்திடுவானென்றும் புகழப்பட்டுள்ள இராமன் உயிர்நண்பனிடத்தில் இப்படி த்ரோஹசிந்தனை கொண்டானென்றால் இது பொருத்தமாக இல்லையே! என்கிற சங்கை தோன்றும். இதற்குப் பரிஹாரமுணர்த்தும் வகையாகவே "ஸர்வ பூதேஷு கோ ஹித:?" என்னுமிவ்வினு தோன்றி யுள்ளது. பகவான் ப்ரியஞ்செய்வதிற்போலவே ஹிதஞ்செய்வதிலும் ஊற்றமுற்றவனுதலால், கீழே விவரித்த வரலாறு போன்ற வரலாறுகள் ஹிதவகுப்பில் சேர்க்கத்தக்கவையேயாகும்.

இராவணவதம் ஆனபிறகு பிராட்டி அக்நிப்ரவேசம் செய்வதற்குறுப்பாகப் பெருமாள் சொன்ன கடுஞ்சொற்களும் இங்ஙனமே ஹித வகுப்பில் சேர்க்கத்தக்கவையே.

நாரத முனிவரை நோக்கிக் கேட்கும் வான்மீகி முனிவர் "கோ ஹித:?" என்று இவ்வளவே கேளாமல் "ஸர்வபூதேஷு கோஹித:" என்று கேட்டிருத்தலால் ஸர்வேச்வரனுடைய தன்மையை நெஞ்சிற்கொண்டே கேட்டதாக நன்கு விளங்குகின்றது. ஸர்வபூதங்களிடத்தும் ஹிதபரனுயிருக்குந் தன்மை பகவானுக்கே யன்றோ உள்ளது. நம்போல்வார்க்கு எவ்வகைக் கஷ்டங்கள் நேர்ந்தாலும் அவை பகவத் ஸங்கல்பத்தினுலேயே நேருகின்றனவென்றும், காருணிகனை பகவானுல் அவை ஹிதபுத்தியடியாகவே விளைக்கப்படுகின்றன வென்றும் உண்மையுணரும் பெரியோர் உணர்வர். இதுபற்றியே "ஹரிர் துக்காநி பக்தேப்யோ ஹிதபுத்த்யா கரோதி வை" என்று சாஸ்த்ரஞ் சொல்லிவைத்தது. .... .... .... .... *

## 9. க: வித்வாந்?

வான்மீகி நாரத ஸம்வாதத்தில் "க: வித்வாந்?" என்கிற ஒன்பதாவது வினா இனி விவரிக்கப்படுகிறது. வித்வாந் என்னுஞ் சொல்லுக்கு 'அறிந்தவர்' என்று பொருள். எதையறிந்தவர் என்று கேள்வி பிறக்கும்; எல்லாமறிந்தவர்க்கே வித்வானென்று பெயர் வழங்கும். உலகத்தில் மனிதனாகப் பிறந்தவன் ஏதேனு மொன்றையோ சிலவற்றையோ அறியாமலிருக்க முடியாது; அன்னவர்களையெல்லாம் வித்வானென்று வழங்குவதில்லை. அனேகசாஸ்த்ரங்களை விசேஷமாக அறிந்தவர்களையே வித்வானென்று வழங்குவர். வான்மீகிமுனிவரின் வினாக்களுக்கு மேலே விடையளிக்கின்ற நாரதர்,

"வேத வேதாங்க தத்வஜ்ஞ: தநுர்வேதேச நிஷ்டித:,
ஸர்வசாஸ்த்ரார்த்த தத்வஜ்ஞ: ஸ்ம்ருதிமாந் ப்ரதிபாநவாந்"

என்கிறவொரு சுலோகத்தினால் இராமபிரானது வித்வத் தன்மையை விவரித்திருக்கின்றார். 'நான்கு வேதங்களென்ன, அவற்றுக்கு ஏற்பட்டுள்ள ஆறு அங்கங்களென்ன இவற்றின் தத்துவங்களை நன்கறிந்தவனும், தநுர்வேதத்தில் நிலைபெற்றவனும், ஸர்வசாஸ்திரங்களினுடையவும் உண்மைப் பொருள்களையறிந்தவனும், ஞாபக சக்தியும் ப்ரதிபா சக்தியும் உடையவனாயிருப்பவன் இராமபிரான்' என்பது இதனால் தெரிவிக்கப்படுகிறது. பகவதம்சமாகையாலே இயற்கையாகவே ஸர்வஜ்ஞனாயிருக்கச்செய்தேயும் வஸிஷ்டமுனிவர் பக்கலிலே சிஷ்யவ்ருத்தி செய்து ஸகல வேதங்களையும் மற்றுமுள்ள ஸகல சாஸ்த்ரங்களையும் வரியடைவே ஓதியுணர்ந்தவனாதலால் இளமையிலேயே வித்வானென்று பேர்பெற்றனன். ருக்வேதம் யஜுர்வேதம் ஸாமவேதம் அதர்வணவேதம் என்கிற நான்கு வேதங்களையும் ஓதினதுமாத்திர மன்றிக்கே அவற்றின் உள்ளுறை பொருள்களையுமறிந்தவனும் இராமன். சீக்ஷா வியாகரணம் சந்தஸ் நிருக்தம் ஜ்யோதிஷம் கல்பம்என்கிற வேதாங்கங்கள் ஆறையுமறிந்தவனும்.

### இராமனது வித்வத் தன்மையில் தோன்றுமாக்ஷேபம்

இதை நாம் ஆராயும்போது ஒரு சங்கை தோன்றும்; ஸாக்ஷாத் நாராயணனான இராமன்தான் ஸகலவேதங்களினாலும் பிரதிபாதிக்கப்படுபவன் என்பது விவாதமற்ற விஷயம்: ஆரணிய காண்டத்தில் இராமனை விராதன் தோத்திரம் செய்யும்போது,

"வேதங்க ளறைகின்ற உலகெங்கும் விரிந்தனவுன்
பாதங்க ளிவையென்னில் படிவங்க ளெப்படியோ?

ஓதங்கொள் கடலன்றி யொன்றினே டொன்ருெவ்வாப்
பூதங்கள் தொறுமுறைந்தால் அவையுன்னைப் பொறுக்குமோ?"

என்கிருன். மேலே கவந்தன் தோத்திரம் செய்யும்போதும்,

"ஆதிப் பிரமனுநீ ஆதிப் பரமனுநீ
ஓதி யுறுபொருளுக் கப்பாலுண் டாயினுநீ,
சோதிச் சுடர்ப்பிழம்பு நீயென்று சொல்லுகின்ற
வேதமுரை செய்தால் வெள்காரோ வேறுள்ளார்?"

என்கிருன். இப்படி இராமனைத் தோத்திரஞ் செய்பவர்கள் யாவரும் அவனை வேதவேத்யனுகவே சொல்லித் துதிக்கின்ருர்கள். "வேத வேத்யே பரே பும்ஸி ஜாதே தசரதாத்மஜே" என்று ஸ்ரீராமாயணத்தனிய னும் ப்ரஸித்தமாகவுள்ளது. "அஹம் வேத்மி மஹாத்மாநம் ராமம் ஸத்ய பராக்ரமம், வஸிஷ்டோபி மஹாதேஜா யேசேமே தபஸி ஸ்திதா:" என்று தசரத மன்னவனிடம் சொன்ன விச்வாமித்ரமுனிவனும் இராமனை வேத வேத்யனுகவே தெரிவித்தானுயிற்று. "வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்" என்கிற புருஷஸூக்தத்தை யுட்கொண்டே "அஹம் வேத்மி மஹாத் மாநம்" என்று சொல்லப்பட்டதாக வியாக்கியானம் செய்கிருர்கள். இதைப்பற்றி விரிவாக எழுதவேண்டிய அவசியமுண்டோ? ஆக, வேதமுதற்பொருளாய் ஸகலசாஸ்த்ரஸாரப் பொருளாய் விளங்கு மிராமன் வேதங்களையும் சாஸ்த்ரங்களையும் கற்கவேணுமோ? அவற் றின் உண்மைப்பொருள்களை யுணர்ந்தானென்ருல் 'ஸகல வேதங் களுக்கும் ஸகல சாஸ்த்ரங்களுக்கும் நாமே பொருள்' என்று உணர்ந் தானென்றுதானே பொருள் கூறவேண்டும். தன்னைப்பற்றித் தோன் றிய சாஸ்திரங்களைத் தானே கற்பனே? உண்மையுணர்ந்த வஸிஷ்ட முனிவர்தாம் கற்பிப்பரோ? என்றிங்ஙனே சங்கைகள் தோன்றும்.

### மேற்கூறிய ஆக்ஷேபத்திற்குப் பரிஹாரம்

இவற்றுக்கு ஸமாதானம் கேண்மின்: விஷ்ணுவும் நாராயண னுமான பரமபுருஷனே ஸ்ரீராமனுக வந்து அவதாரம் பண்ணின னென்கிறவுண்மையை யாரும் அபலாபம் செய்ய முடியாது. இரா மனை ஒரு மனிதனுகவே வைத்துப் பேசுகின்ற வான்மீகி முனிவரும் சில விடங்களில் இராமன் விஷ்ணுவின் அவதாரமே யென்பதை வெளியிட்டார்; அங்ஙனேயுள்ள ஒன்றிரண்டிடங்களை யெடுத்துக் காட்டுகிருேம். தசரதமன்னவன் புத்திரகாமனுய் வேள்வியியற்றும் போது அங்கு வந்துசேர்ந்த தேவர்கள் அனைவரும் இராவணனது நலிவுகளைக்கூறி வருந்துகையில், "ஏதஸ்மிந்நந்தரே விஷ்ணுருபயாதோ

மஹாத்யுதி:" என்று, ஸ்ரீமஹாவிஷ்ணு அவ்விடம் வந்துதோன்றி அத் தேவர்கட்கு அபயமளித்து மறைந்ததாகச் சொல்லிற்று.

மேல் அயோத்யாகாண்டம் முதல் ஸர்க்கத்தில் "ஸஹி தேவை ருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி:, அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந:" என்று சொல்லிற்று. கொழுத்துத் திரியுமவனுன இராவணனது வதத்தை விரும்பின தேவர்களால் பிரார்த்திக்கப்பட்ட ஸ்ரீமஹாவிஷ்ணு மானிடவுலகில் வந்து பிறந்தானென்பது இந்த ச்லோகத்தின் கருத்து. இதெல்லாம் ஒருபுறமிருக்க,

யுத்தகாண்டத்தில் நூற்றிருபதாம் ஸர்க்கத்தில் (பிராட்டி அக்னிப்ரவேசம் செய்யும் பிரகரணத்தில்) ஸகல தேவர்களும் இராம பிரானை யணுகி

"கர்த்தா ஸர்வஸ்ய லோகஸ்ய ச்ரேஷ்டோ ஜ்ஞாநவதாம் வர:,
உபேக்ஷஸே கதம் ஸீதாம் பதந்தீம் ஹவ்யவாஹநே,
கதம் தேவகணச்ரேஷ்டம் ஆத்மாநம் நாவபுத்யஸே?"

என்றுர்கள். இராமா! ஸர்வேச்வரனென்பதை அறியகில்லாயோ? என்றுர்கள். இதற்கு இராமன் கூறுகின்ற விடை குறிக்கொள்ளத் தக்கது. "ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தசரதாத்மஜம்" என்று இராமன் மறுமொழி கூறியுள்ளான். இது வெகு சமத்காரமான மறு மொழியாகும். ஸத்யவாதிகளில் தலைவனுன இராமன் 'நான் நாராயணனல்லேன்' என்று சொல்லிக் கொள்ளமாட்டான்; 'நாராயணன்தான் நான்' என்று உண்மையைச் சொல்லிக்கொண்டால் ரஸபங்கமாகும். இப்படி ரஸபங்கமுமாகாமல் பொய்சொன்னது மாகாமல் வெகு சாதுரியமாக அளிக்கும்விடை "ஆத்மாநம் மாநுஷம் மந்யே" என்பது. 'நான் நாராயணனுயினும் இப்போது ஸாமான்ய மானிடக்கோலம் பூண்டு வந்திருக்கிறேன்' என்று தானே தன் தன்மையை வெளியிட்டானுயிற்று, இராமன்.

இப்படிப்பட்ட மநுஷ்யபாவனைக்குச் சேரவே ஸ்ரீராமாயண கதைகள் பெரும்பாலும் நடைபெற்றிருக்கின்றன. அயோத்யா காண்டத்தில் இராமன் தந்தையாரிடம் யுவராஜபட்டாபிஷேகத் திற்கு நியமனம் பெற்றுச் சில சடங்குகள் அனுட்டித்ததாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. "ஸஹ பத்ந்யா விசாலாக்ஷ்யா நாராயண முபாகமத்" என்று, தானும் பிராட்டியுமாக நாராயணனைத் தொழுததாகச் சொல்லிற்று. அன்றியும் "மஹதே தைவதாயாஜ்யம் ஜுஹாவ ஜ்வலிதே

அநலே" என்று, மஹத்தான வொரு தேவதைக்கு ஹோமம் பண்ணின தாகவும் சொல்லிற்று. யுத்தகாண்டத்தில் இராவணனை வதைக்கும் பொருட்டு அகத்திய முனிவர்பக்கல் ஆதித்யஹ்ருதயோபதேசம் பெற்றதாகவும் சொல்லிற்று. இப்படிப்பட்ட பல விஷயங்களைப் பொருந்தவிட வேண்டுமானுல் இராமனை ஸ்ரீமந்நாராயண மூர்த்தி யாகவே வைத்துப் பொருந்தவிட முடியாதன்றோ. "ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தசரதாத்மஜம்" என்கிற அவன்றன்னுடைய வாய்மொழியின்படி தசரதாத்மஜனை ஒரு மனுஷ்யனென்றே வைத்துப் பொருந்தவிடவேண்டும். இராமன் வேதங்களையும் வேதாங் கங்களையும் வேதாந்தங்களையும் ஓதினுனென்னும் விஷயத்தையும், ஸ்ரீமஹா விஷ்ணுவுக்கு ஆராதனமான யஜ்ஞங்களை நடத்தினுனென் னும் விஷயத்தையும் இவ்வழியானே பொருந்தவிடக்குறையில்லை. ஆகவே இராகவன் வேதவேதாங்கங்களை யோதி வித்வானென்று பேர் பெற்றதில் யாதொரு குறையுமில்லை யென்க.

இனி, வித்வாந் என்பதற்கு மற்றொருவகையாகவும் பொருள் கூறலாம். ஸர்வஜ்ஞன் என்றபடி. எம்பெருமானுன நாராயணனுக் குள்ள ஸர்வஜ்ஞத்வத்தைச் சொன்னபடி. அவனுக்கு பகவாந் என்று பெயர். ஞானம் சக்தி பலம் ஐச்வரியம் வீரியம் தேஜஸ் என்கிற ஆறு குணங்களுக்கு பகம் என்று பெயர்; அக்குணங்களுடைமைபற்றிப் பகவானென்கிறது. இக்குணங்களுள் முதலது ஞானம்; அதாவது,

''யுகபதநிசமக்ஷை: ஸ்வைஸ் ஸ்வதோவாக்ஷகார்யே
நியமம் அநியமம் வா ப்ராப்ய ரங்காதிராஜ,
கரதலவதசேஷம் பச்யஸி ஸ்வப்ரகாசம்
தததவரணமமோகம் ஜ்ஞாநமாம்நாஸிஷுஸ் தே."

என்று ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தரசதகத்தில் பட்டர் அருளிச்செய்த படியே ப்ரத்யக்ஷம் பரோக்ஷம் என்கிற வாசியின்றிக்கே அனைத்தை யும் கையிலங்கு நெல்லிக்கனிபோல் காணவல்லவர் என்றபடி.

உபநிஷத்துக்களில் பகவானுடைய வித்வத்தன்மை ஆச்சரிய மாகக் கூறப்பட்டுள்ளது;

"பச்யதி அசக்ஷுஸ் ஸ ச்ருணோதி அகர்ண:
அபாணிபாதோ ஜவநோ க்ரஹீதா"

என்று. பகவானுக்குக் கண்கிடையாது, ஆனுலும் அவன் காணுத தில்லை; அவனுக்குக் காது கிடையாது, ஆனுலும் அவன் கேளாத தில்லை; அவனுக்குக் கை கிடையாது, ஆனுலும் எல்லாப் பொருள் களையும் எடுக்கிருன்; அவனுக்குக் கால் கிடையாது; ஆனுலும் அவன்

எங்கும் விரைந்துசெல்கிறுன் என்பது மேலே குறித்த உபநிஷத்வாக்யத்தின் கருத்து. "உள்ளுவாருள்ளிற்றெல்லா முடனிருந்தறிதி" என்று திருமாலையில் தொண்டரடிப்பொடி யாழ்வாரு மருளிச்செய்கிறுர். "கருதரியவுயிர்க்குயிராய்க் கரந்தெங்கும் பரந்துறையு மொரு தனி நாயகமென்றுல் உன்பெருமைக் களவாமோ?" என்று (திருவரங்கக் கலம்பகம்) பிள்ளைப்பெருமாளையங்கார் பணித்தபடி எங்கும் நிறைந்துறையும் பரம்பொருளான பெருமான் அறியாத தொன்றுண்டோ?

## எம்பெருமானுடைய ஸர்வஜ்ஞத்வத்தின் விளக்கம்

சிலர் ஏகாந்தமாகப் பாவங்களைச செய்து இதை யாருமறியார்களென்று நினைக்கிறுர்கள். நம்மைப்போன்ற மனிதர்கள் அதை அறியமுடியாதேதவிர வித்வானென்று பெயர்படைத்த பகவானும் அறியமுடியாததுண்டோ? பகவானை ஸர்வாந்தர்யாமியென்றும் ஸர்வவ்யாபகனென்றும் உள்ளபடி யறியுமவர்கள் அவன் எதையும் கைகொள்கனியாகக் காண்பவனென்ற தத்துவமறிந்து புத்திபூர்வமாகப் பாவஞ்செய்யத் துணிவதில்லை. காளிதாஸ மஹாகவி ரகுவம்ச காவியத்தில் இந்துமதீஸ்வயம்வரம் வருணிக்குமிடத்து கார்த்தவீர்யார்ஜுனனுடைய பெருமையை இந்துமதிக்கு அவளது தோழியெடுத்துரைப்பதாக ஒரு சுலோகமுள்ளது; "அகார்ய சிந்தாஸமகாலமேவ ப்ராதுர்ப்பவந் சாபதர: புரஸ்தாத்" இத்யாதி; இதன் கருத்தாவது, உலகிலுள்ள மற்ற அரசர்களது ராஜ்யத்தில் குடிமக்கள் தப்புக்காரியங்கள் செய்தால் நீதி மன்றத்தில் தெரிவிக்கப்பட்டு ஸாக்ஷி விசாரணை முதலியன நடைபெற்று மெய் பொய்யாகவும் பொய் மெய்யாகவும் முடிவுபெறுவதுண்டு; இக்கார்த்தவீரியனுடைய ராஜ்யத்தில் அப்படியில்லை; யாரேனு மொருவன் தப்புக் காரியத்தை நெஞ்சால் நினைத்தாலும் அப்போதே இவ்வரசன் வில்லுங் கையுமாய் அவனெதிரே வந்து நின்று அவனைச் சிக்ஷிக்குமவன் என்றது. அற்பனுன ஓரரசனது பெருமையிதுவானுல் "யஸ் ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித்; பரா அஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே" என்று உபநிஷத்துக்களில் புகழப்பட்ட அற்புதமான ஞான சக்திகள் வாய்ந்த பகவானது பெருமையைப் பற்றிச் சொல்லவேணுமோ?

கஜேந்திராழ்வான் முதலைதன்னு லடர்ப்புண்டபோது "பரமாபதமாபந்நோ மநஸா அசிந்தயத் ஹரிம்" என்னும்படி நெஞ்சால் நினைத்தவளவிலும் அதே க்ஷணத்தில அதையறிந்து திருநாட்டிலிருந்து அரைகுலையத் தலை குலைய வோடிவந்து காத்தருளின பெருமானது அறிவின் கனம் யாரே அறிகிற்பார்?

*வித்வாந் விபச்சித் தோஷஜ்ஞ:*

'வித்வாந்' என்பதற்கு உலகில் ஒருபொருள் கூறுவதுண்டு; (அதாவது) "வித்வாந் விபச்சித் தோஷஜ்ஞ:" என்ற அமரகோசத்தின்படி தோஷங்களையறியுமவன் வித்வானெனப்படுவன். வித்வானுயிருந்தால் பெரும்பாலும குணங்களை க்ரஹிப்பதன்றிக்கே தோஷங்களை க்ரஹிப்பதேயுள்ளது; ஒரு பண்டிதர் ஒரு நூலையியற்றி ஒரு வித்வானிடம் கொடுத்து இதைக் கடாக்ஷிக்கவேணு மென்றுராம். அவர் வெகு நாழிகை அதைப் பார்த்துக்கொண்டேயிருந்தாராம். 'ஏதாவது தோஷம் அகப்படுமா வென்று பார்க்கிறீரோ?' என்று பண்டிதர் கேட்க, அதற்கு அந்த வித்வான் (விடைகூறினுராம்) 'இல்லையில்லை; ஏதாவது குணம் அகப்படுமா வென்றுதான் பார்க்கிறேன்' என்றுராம். உள்ளதெல்லாம் தோஷமேயொழியக் குணமொன்றுமில்லை யென்று சொன்னுராயிற்று. பெரும்பாலும் வித்வான்களுடைய முறை இதுவாகும். இராமபிரானை வித்வானென்னும்போது இந்த ரீதி கொள்ளத்தக்கதன்று. இராமன் லோகவிலக்ஷணனை வித்வானுவன். இவன் குணஜ்ஞனை வித்வானேயொழிய தோஷஜ்ஞனை வித்வானல்லன். இத்தன்மையை ஒரு ப்ரகரணவிசேஷத்தில் வெளியிட்டருளினன் இராகவன். எங்கேயென்னில்;

பெருமாள் குற்றங்குறைகண்டு கைவிடுபவரல்லர்

விபீஷணுழ்வான் "நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷணமுபஸ்திதம், ஸர்வ லோக சரண்யாய ராகவாய மஹாத்மநே" என்று வானரமுதல்களை நோக்கி ஓலமிட்டு அடைக்கலம் புகுந்தவன்று இரண்டு பக்ஷங்கள் தோன்றின; இவன் துஷ்டனுகையாலே அங்கீகரிக்கத்தக்கவனல்லன் என்பது ஒரு பக்ஷம்; இது ஸுக்ரீவ மஹாராஜர் முதலானுருடையது. இவன் துஷ்டனல்லாமையாலே அங்கீகரிக்கத்தக்கவனே யென்று மற்றொரு பக்ஷம். இது மாருதியினுடையது. இவற்றில் முந்தின பக்ஷத்தைத் தள்ளி பிந்தின பக்ஷத்தை இராகவன் ஆதரித்ததாக உலகில் இராமாயணம் கேட்பவர்களும் சொல்பவர்களும் நினைத்திருக்கிறுர்கள். இப்படியன்றிக்கே, பெருமாள் ஸுக்ரீவாதிகளின் பக்ஷத்தோடொப்ப மாருதி பக்ஷத்தையும் கண்டித்து மூன்றுவதாக ஒரு விலக்ஷண பக்ஷத்தைத் தாம் வெளியிட்டதாக அபயப்ரதானஸாரத்தில் தேசிகன் அற்புதமாக அருளிச்செய்கிறுர். அந்த மூன்றுவது பக்ஷம் எதுவாயிருக்குமென்று வித்வான்கள் தம்தம் உள்ளத்தில் சற்று ஆலோசித்துப் பார்க்கவேண்டும். விபீஷணுழ்வானைக் கொள்ளலாகாதென்று ஒரு பக்ஷம்; அவனைக் கொள்ளலாமென்று மற்றொரு பக்ஷம். இவ்விரண்டு பக்ஷங்களுக்குமேல் மூன்றுவதான வொருபக்ஷம் எங்ஙனே ஸம்ப

விக்கமுடியும்? என்றேஒவ்வொருவரும் தளும்பியிருப்பர்கள். தார்க்கிக கேஸரியான தேசிகன் அருளிச்செய்யுமழகு பாரீர்; விபீஷணனைக் கொள்ளலாம், கொள்ளலாகாது என்கிற இவ்வளவே இங்கு விஷய மன்று. கொள்ளலாம் என்கிற பக்ஷத்தில் எதுஹேதுவாகச் சொல்லப்படுகிறது? கொள்ளலாகாதென்கிற பக்ஷத்தில் எது ஹேதுவாகச் சொல்லப்படுகிறது? என்று பார்க்கவேணும். துஷ்டனுகையாலே கொள்ளலாகாது என்பது முந்தின பக்ஷம். யோக்யனுகையாலே கொள்ளலாம் என்பது பிந்தின பக்ஷம். 'துஷ்டனுகையாலே கொள்ளலாம்' என்ற வொரு பக்ஷம் இவ்விரண்டிலும் வேறுபட்டதாகவே யன்றேவுள்ளது. துஷ்டனுகையாலே கொள்ளலாகாது என்கிற ஸுக்ரீவாதிபக்ஷத்தையும் தள்ளி, யோக்யனுகையாலே கொள்ள வேணுமென்கிற மாருதி பக்ஷத்தையும் தள்ளி துஷ்டனுகையாலே கொள்ளவேணும் என்று பெருமாள் மூன்றுவது பக்ஷம் காட்டி நாட்டினதாக தேசிகன் திருவுள்ளம் பற்றுகிறுர். ஸ்ரீராமாயணத்தில் இந்த ப்ரகரணத்தில் "தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாம் ஏததகர்ஹிதம்" என்றுள்ள ச்லோகமே இதற்கு நிதானம். 'தோஷமிருந்தாலென்ன? அது கிடக்கட்டும்' என்று சொல்லுவதாக ச்லோகத்தின் பொருள் தோன்றும்; தேசிகன் 'யத்யபி' என்பதை வெறும் வாக்யாலங்காரமாகத் தள்ளிவிட்டு 'தோஷ: தஸ்ய ஸ்யாத்'—தோஷம் அவனுக்கு இருக்கவேணும்; என்பதாகப் பொருள் காட்டியருளுகிறுர். தோஷமில்லாதவனைக் கைக்கொண்டால் நமது கருணைக்கு என்ன மதிப்பு? என்பது இராகவன் திருவுள்ளமாம். உலகர்கள் கைவிடுவதற்காக தோஷம் காண்பர்கள்; இராகவன் கைக்கொள்வதற்காக தோஷம் காண்பன் என்றும் கொள்ளலாம். ஆகவே அமரகோசத்தில் சொன்னபடி 'தோஷஜ்ஞ: வித்வாந்' என்கிற வித்வத்தன்மையும் இராமனிடத்தே யுண்டு என்னலாம்.

"குன்றனைய குற்றஞ் செயினுங் குணங்கொள்ளும்" என்ற பொய்கையாழ்வார் பாசுரத்தின்படி குணங்கொள்ளு மியல்வினனை இராமன் குற்றங்களை நெஞ்சிற்கொள்ளான் என்பது முண்டு; வாத்ஸல்ய குணத்திற்கு நிதியான இராமன் தோஷங்களையே பற்றுசாகக் கொண்டு கைக்கொள்வன் என்பதுமுண்டு. ஆக இவ்விஷயங்களெல்லாம் "க: வித்வாந்?" என்கிற கேள்வியில் அடங்கியுள்ளன வென்றுணர்க. .... .... .... .... ....

---

# 10. க: ஸமர்த்த: ?

வால்மீகி நாரதஸம்வாதத்தில் 'க: ஸமர்த்த: ?' என்கிற பத்தாவது வினு விவரிக்கப்படுகிறது. 'வித்வாந் க:' என்கிற வினுவுக்கு அடுத்தபடியாக 'க: ஸமர்த்த: ?' என்கிற இவ்வினுதோன்றியுள்ளது. ஒருவன் வித்வானுயிருந்தால் அவன் ஸமர்த்தனுயிருக்கத் தக்கவனேயன்ருே ? அஸமரத்தனுயிருப்பவன் வித்வானென்னத்தகுவனே ? தக மாட்டானே. ஆகவே, தனித்தனி இந்த வினுக்கள் எதற்காகத் தோன்றினவென்று ஆராயுமளவில் வித்வத்தென்பது தனிப்பட்டது, ஸாமர்த்தியமென்பது தனிப்பட்டது என்றும், வித்வானுயிருப்பவர்கள் யாவரும் ஸமர்த்தர்களாயிருக்கமாட்டார்களென்றும் தெரிந்து கொள்ள ப்ராப்தமாகும். இதைப்பற்றி லௌகிக கதையொன்று நினைவுக்கு வருகின்றது ; அதைத் தெரிவிக்கிருேம். கேண்மின் ;

## ஆசார்ய சிஷ்யர்களின் ஹாஸ்ய கதையொன்று

மிகச் சிறந்த வித்வானெருவர், ஆசார்யபீடம் வஹிப்பவர், ஆஸ்தானவித்வான்கள் நால்வருடன் சிஷ்ய யாத்திரை புறப்பட்டார். கல்கத்தா மகாநகரம் சென்று சேர்ந்து அவ்வூரில் தம்முடைய சிஷ்யர்களில் தலைவனை ஒரு ஸேட்டுக்குத் தம்முடைய வரவைத் தெரிவிக்க வேண்டி முதல்வரான ஆஸ்தான வித்வானை அவனிடமனுப்பினர். அவர் வந்து ஸேட்டைக் கண்டவுடனே ஒன்றும் பேசத்தோன்ருமல், திகைத்து நின்ருர் ; ஏனென்ருல் அந்த ஸேட்டு மிகவும் ஸ்தூலகாயர். அங்கிருக்கிற வாசற்படிவழியாக அந்த ஸேட் போக்குவரத்து செய்ய முடியாதென்று அவருடைய எண்ணம். ஆகவே இவன் எப்படி இந்த பங்களாவினுள்ளே வந்து சேர்ந்தானென்கிற விசாரம் அந்த வித்வான் மனத்தில் தோன்றிவிட்டது. அதனுல் ஒன்றும் வாய்திறவாமல் திகைத்துநின்ருர். அது கண்ட ஸேட்டு 'நீர் யார் ? எதற்காக வந்தீர் ? ஏன் நிற்கிறீர்' என்று கேட்க, அதற்கு வித்வான் 'ஸேட்ஜீ ! அதைப்பற்றிப் பிறகு பேசுகிறேன் ; என்னுடைய பெரியஸந்தேஹத்தை நீ முதலில் தீர்க்கவேணும் ; இந்த பங்களா கட்டினபிறகு நீ இதனுள்ளே புகுந்திருக்க முடியாது ; முன்னுடியே உன்னை உள்ளே உட்காரவைத்து இது கட்டியிருக்கவேண்டும் என்று நினைக்கிறேன். இப்படித்தானு ? வேறுவிதமா ? சொல்லாய் சீமானே !' என்ருர். இது கேட்டவுடனே ஸேட்டுக்குக் கோபம் உண்டாயிற்று. ஏதோ சிறிது பருத்திருக்கிருேமென்று நம்மை இப்படி பரிஹாஸம் செய்கிருனேயிவன் ! என்று சீறி 'இந்த பிராமணனை ஒரு அறையில் அடையுங்கள்' என்று கட்டளையிட்டான். அப்படியே வித்வான் அடைபட்டுக் கிடக்க. ஆசாரியர் வெகுநாழிகை எதிர்பார்த்தும், சென்ற வித்வான் வரக்காணுமல் இரண்டாவது ஆஸ்தான வித்வானை ஸேட்டிடம் போக

விட்டார். அவர் வந்து வாசலிலேயே செய்தி விசாரித்து நடந்ததைத் தெரிந்துகொண்டு ஸேட்டிடம் சென்று, 'ஸேட்ஜீ! எங்களில் ஒருவன் இங்குவந்து ஏதோ தவறான கேள்வி கேட்டதாகத் தெரிகிறது. அவன் முழுமூடன்; ஏதோ வொருவிதமாக இந்த பங்களாவுக்குள் நீ புகுந் தாய்விட்டது; அதைப்பற்றி இப்போது ஏன் விசாரம்? நாளைக்கு நீ மரணமடைந்துவிட்டால் உன்னை எவ்வழியாலே வெளிப்படுத்துவது என்கிற விசாரமன்றோ இப்போது செய்யத்தக்கது; அதைவிட்டு 'எப்படி உள்ளே புகுந்தாய்?' என்கிற வீண் விசாரத்தை அந்த மூடன் ஏதுக்குச் செய்தான்?' என்றார். அது கேட்ட ஸேட்டு அள விறந்த கோபங்கொண்டு அவரையும் உள்ளேயடைக்க உத்தரவிட் டான். அவரும் அடைபட்டுக் கிடக்க, ஆசாரியர் நெடுநேரம் எதிர் பார்த்துவிட்டு மூன்று மாஸ்தான வித்வானை ஸேட்டிடம் போக விட்டார்.

இவர் வந்து வாசலிலேயே, முன்வந்த இருவருடையவும் செய் தியை விசாரித்தறிந்து ஸேட்டிடம் வந்து, 'ஸேட்ஜீ! எங்களில் இருவர் இவ்விடம் வந்து மிக மூடத்தனமான பேச்சுக்களைப் பேசின தாகக் கேட்டு மிக வருந்துகிறேன்; நீ மரணமடைந்தொழிந்தபிறகு எப்படி உன்னை வெளியிற்கொண்டுபோவதென்கிறவிசாரம் ஏதுக்கு? சுவர்களை ஜாடாக இடித்துவிட்டு எளிதில் கொண்டுபோகத் தடை யென்ன? ஏதுக்கு வீண்விசாரம் கொண்டார் எங்கள் வித்வான்? அந்த மஹா மூடர்களை விட்டுத்தொலை' என்றார். அதுகேட்ட ஸேட்டு இன்னமும் கோபம் பொங்கி அவரையும் உள்ளேயடைக்க உத்தர விட்டான். அவரும் அடைபட்டுக்கிடக்க, வெகுநாழிகை பொறுத்து ஆசாரியரால் அனுப்பப்பட்ட நான்காம் வித்வான் ஓடிவந்து முன்னே வந்த மூவருடையவும் செய்திகளை வாசலிலேயே விசாரித்தறிந்து கொண்டு ஸேட்டிடம் வந்து, 'ஸேட்ஜீ! எல்லா விஷயங்களையும் கேள்விப்பட்டேன்; என்ன அநியாயமான வார்த்தைகள்! இந்த பங்களா எவ்வளவு மனோஹரமாயிருக்கிறது! இதை யிடித்து உன்னை வெளிப்படுத்துவதென்பது ஐயோ, என்ன பேச்சு! எதற்காக இடிக்க வேண்டும்? நீ மாண்டபிறகு உன்னைக் கத்தியினால் சதைசதையாக அறுத்தால் ஒரு புட்டுக்கூடையில் வெளியேற்றமுடியாதா? ஒரு கூடையில் முடியாதென்றால் நாலைந்து கூடைதான் ஆகட்டுமே; நாலைந்துநிமிஷத்தில் அநாயாஸமாக வெளியேற்றக் கூடியதாயிருக்க, சுவர்களையிடிப்பதும் வாசற்காலைப் பேர்ப்பதுமான ஆலோசனைகள் என்ன அநியாயம்! என்றார்.

ஸேட்டுக்குக் கோபம் தாங்கமுடியவில்லை. நால்வர்க்கும் கொடுந்தொழில் புரியக் கட்டளையிட்டான். இப்படி நால்வரும் சென்று திரும்பிவராமற் போகவே ஆசாரியர் நேராக ஓடிவந்து

நால்வர் செய்தியையும் விசாரித்தறிந்து! திடுக்கிட்டு ஸேட்டிடம் ஓடி வந்து, 'அப்பா! லௌகிகமொன்று மறியாத மூடர்களின் பேச்சைப் பொருள்படுத்தலாமா நீ? உன்னைச் சதைசதையாக அறுத்துக் கூடையில் வெளியேற்றுவதென்பது எவ்வளவு அநீதியான பேச்சு; காதால் கேட்க முடியவில்லையே; நீ மாண்டொழிந்த பிறகு இந்த பங்களா தான் ஏதுக்கு? சுவரை யிடிப்பதும் வாசலைப் பெயர்ப்பதும் ஏதுக்கு? இந்த பங்களாவோடே உன்னைப் பொசுக்கிவிடமுடியாதா? பிறகு இந்த பங்களாவை ஆளத்தக்கவன் யாவனுளன்?' என்று வாயோயாமல் ஏதேதோ சொல்லிக்கொண்டிருந்தார். ஸேட்டுக்கு இன்னது செய்வதென்று தோன்றவில்லை. அதுகிடக்க.

இந்த ஐந்து வித்வான்களும் தர்க்கவியாகரணமீமாம்ஸைகளில் நிகரற்ற வித்வான்களே. இவர்களுடைய ஸாமர்த்தியமோ இப்படிப் பட்டதாயிருக்கின்றது. இக்கதை போன்ற பல கதைகளுள்ளன. இவற்ருல், வித்வத்துக்கும் ஸாமர்த்தியத்திற்கும் ஸம்பந்தமில்லையென்பதே பெறப்படும். ஆகவே, இராமபிரானுடைய ஸாமர்த்தியத்தைத் தனிப்பட அநுபவிக்கவேண்டியே 'க: ஸமர்த்த:?' என்னும் வினு எழுந்தது. இனி இராமபிரானுடைய ஸாமர்த்தியத்தைச் சிறிது அநுபவிப்போம்.

### இராமனிடத்தில் அஸாமர்த்திய சங்கை

இராமன் செய்திருக்கின்ற காரியங்களுள் சிலவற்றை மேலெழ நோக்குங்கால் 'இவன் அஸமர்த்தனே' என்று நினைக்கநேரும். உட்புகுந்து ஆராய்ந்தவாறே 'இவனின் மிக்க ஸமர்த்தனில்லை' என்று அறுதியிடலாகும். இராமன் செய்த காரியங்களுள் சிலவற்றை ஒவ்வொன்ருக எடுத்துக்கொண்டு விமர்சிப்போம். ஸுக்ரீவமஹாராஜனேடு நட்புக்கொண்டு வாலியை வதைத்தானென்பது ஒரு காரியம். ஸுக்ரீவனை ராவணஸம்ஹாரத்திற்குத் துணையாகக் கொண்டானென்றும் சொல்லப்படுகிறது. உண்மையில் வாலி மிகச் சிறந்த பெருவீரன். இராவணனைத் தன் வாலினல் சுற்றிக் கக்ஷத்தில் இறுக்கிக்கொண்டு கடலோதங்கள் திரிந்து கிட்கிந்தையில் வந்து உதறின வாலியின் வீரம் விசேஷித்துச் சொல்லத்தக்கதோ? அப்படிப்பட்ட பெருமிடுக்கனை வாலியைத் துணைகொண்டால் இராவணனை அவலீலையாகக் கொன்ருெழிக்கலாம். இதுதான் ஸமர்த்தன் செய்யக்கூடிய காரியம். இதைவிட்டு வாலியை வதைத்தும், அவனிடம் அஞ்சி யொளித்திருந்த ஸுக்ரீவனைத் துணைகொண்டும் போந்தது அஸமர்த்த க்ருத்யமல்லவா? என்று ஸாமானியமாகப் பலர் பேசிவிடுவதுண்டு. இங்கு விவேகிகள் ஆராயவேண்டியது;—

## மேற்கூறிய சங்கைக்குப் பரிஹாரம்

இராவண ஸம்ஹாரஞ்செய்ய உண்மையில் இராமனுக்குத் துணைவேண்டுமா? துணை வேண்டியா ஸுக்ரீவனைப் பரிக்ரஹித்தது? என்று விமர்சிக்கவேண்டும். சரித்திரங்களைப் பார்க்கும்போது, இராவணன் ஆயிரந்தோள்வீரனான கார்த்தவீரியனிடத்தில் பங்கப் பட்டவன்; அவன்றானும் *கோக்குல மன்னரை மூவெழுகால் ஒரு கூர் மழுவால் போக்கியதேவனென்றும், *வென்றி மாமழுவேந்திமுன் மண்மிசை மன்னரை மூவெழுகாற் கொன்ற தேவனென்றும்,* மழு வினாலவனியரசை மூவெழுகால் மணிமுடி பொடி படுத்து உதிரக் குழுவுவார் புனலுள்குளித்து வெங்கோபந் தவிர்ந்தவனென்றும் புகழப்பட்ட பரசுராமனிடத்தில் பங்கப்பட்டவன்; அப்பரசுராமன்றா னும் *என் வில்வலி கண்டுபோ வென்றெதிர்வந்து தன்வில்லினோடும் தவத்தை யெதிர்வாங்கப்பெற்று இராமனிடத்துப் பங்கப்பட்டவன் என்பதை நன்கறிகின்றோம். இப்படிப்பட்ட மஹாவீரஸார்வபௌம னான இராமன் *பொல்லாவரக்கனைக் கிள்ளிக்களைந்தானென்று ஆண்டாளருளிச்செய்தபடிக்கும், சதுரமாமதிள் சூழிலங்கைக் கிறை வன் தலைபத்துதிரவோட்டி ஓர்வெங்கணையுய்த்தவன்* என்று திருப் பாணாழ்வார் பணித்தபடிக்குஞ் சேர இராவணனை அவலீலையாக முடிக்கவல்லவனென்பது ஐயப்பாடற்றதொன்றாம். இப்பெருவீரன் ஸுக்ரீவனைத் துணை கொண்டானென்பது அஸம்பாவிதம். "தீன பந்து" என்றும் "தீனதயாளு" என்றும் முறையிடப்படுகிற தனது பெருங்குணத்தை உலகில் விளக்கிக் காட்டவேண்டியே இராமன் ஸுக்ரீவனைப் பரிக்ரஹித்தது. பெருமாள் திருமொழியில் "இளைய வர்கட்கு அருளுடையாய் இராகவனே." என்று குலசேகராழ்வார் விளித்ததும் இதனை வற்புறுத்தும். மூத்தவனான வாலியை வதைத்து இளைய தம்பியான ஸுக்ரீவனுக்கு அருள் புரிந்தவனே! மூத்தவனான இராவணனை வதைத்து இளைய தம்பியான விபீஷணாழ்வானுக்கருள் புரிந்தவனே! என்பது மாத்திரம் இதற்குப் பொருளன்று. இளையவர் கள் என்பதற்கு இளைத்தவர்கள் என்பதும் பொருள்; வலிமையற்ற தீனர்கள் என்றபடி. அன்னவர்கட்கு அருள்செய்வதே பெருமா ளுடைய இயல்பாதலால் இதற்குப் பொருத்தமாக ஸுக்ரீவனைப் பரிக்ரஹித்தபடியேயொழிய ராவணவதத்திற்குத் துணைகொண்ட தாக நெஞ்சாலும் நினைக்கத் தகுதியில்லை. *கலையுங் கரியும் பரி மாவும் திரியுங் கானங்கடந்துபோய்ச் சிலையுங்கணையும் துணையாகச் சென் றான் வென்றிச் செருக்களத்து* என்று திருமங்கையாழ்வாருளிச் செய்தபடி இராமனுக்குத் தனது சிலையும் கணையும் துணையே யல்லது வேறெதுவும் துணையன்று. ஆழ்ந்து ஆராயுங்கால் அந்தச் சிலையும் கணையுங் கூடத் துணையல்ல. விபீஷண பரிக்ரஹப்ரகரணத்தில் *"அங்

துல்யக்ரேண தாந் ஸந்யாம இச்சந் ஹரிகணேச்வர"* என்று ஸுக்ரீவனையே நோக்கிப் பெருமாள் பணித்தபடி ஸங்கல்பமொன்றுதான் அவற்கு உற்றதுணை. இராவணனை வதைக்க இராமன் அபரிமிதமானசிரமங்கள் பட்டதாகக் கதை காண்பதெல்லாம் எதற்காக வென்பதைக் கீழே "க: வீர்யவாந்?" என்னும் இரண்டாவது வினவை விவரிக்குமிடத்து விளக்கியுள்ளோம். ஆக, ஸுக்ரீவனைப் பரிக்ரஹித்தது அஸமர்த்த க்ருத்யமன்றென்பது தெற்றென விளங்கிற்று.

வாலியை வதைத்தது ஸுக்ரீவனது வேண்டுகோளுக்காக வென்று கதைப்போக்கால் அறியக்கிடந்ததாயினும் உண்மை அங்ஙனமல்ல. "விநாசாய ச துஷ்க்ருதாம்" என்று கீதையிற்கூறியபடி துஷ்டர்களை வதைக்க அவதரித்த பெருமாளுக்கு இது இயல்பாக அமைந்ததேயன்றி வேறன்று. இதைப்பற்றி மற்றோரிடத்து விவரிப்போம்.

### ஸமுத்ர சரணுகதியில் தோன்றும் சங்கை

இனி, இராமனது மற்றொரு காரியத்தை யெடுத்துக்கொள்வோம். கடலைக் கடந்து இலங்கை செல்ல வேண்டினபோது கடலரசனை நோக்கிச் சரணுகதி செய்ததாகக் கதை காண்கிறோம். உலகில் சரணுகதி செய்வதென்பது அஸமர்த்தன் செய்யுங் காரியமேயன்றி, ஸமர்த்தன் செய்யுங் காரியமன்றென்பது வியாக்கியானிக்கவேண்டாத விஷயம். *திஸ்ரஸ் திஸ்ர: அதிசக்ரமு:* என்று வான்மீகி முனிவர் கூறியபடி மூன்றுநாள் தரைக்கிடை கிடந்த பின்பும் கடலரசன் முகங்காட்டாதேயிருக்க, *க்ரோதமாஹாரயத் தீவ்ரம்* என்றபடி சீற்றத்தை வரவழைத்துக்கொண்ட இராமன் இளையோனை நோக்கி வில்லையும் கொடிய அம்புகளையுங் கொண்டுவருமாறு கட்டளையிடுங்கால் *அஸமர்த்தம் விஜாநாதி மாமயம் மகராலய:* என்று தன் திருவாக்கினுலேயே சொல்லியிருப்பது காணலாம். 'இளையா! இக்கடல் தன்னை ஒரு மீன்படுகுட்டமாக நினையாதே என்னை அஸமர்த்தனுக நினைத்துவிட்டது' என்கிருர் பெருமாள். உண்மையில் அஸமர்த்தன் செய்யக்கூடிய காரியத்தை [சரணுகதியை]த் தான் செய்துவிட்டு இங்ஙனே சொல்லத்தகுமாவென்று பார்க்கவேணும். சரணுகதிசெய்ததேன்? என்பதைப்பற்றிப் பிறகு விமர்சிப்போம். அஸமர்த்தபுருஷன் செய்யுங்காரியத்தைச் செய்தானென்பதுகொண்டு இராமனை அஸமர்த்தனென்னத் தட்டென்? என்பர்.

### பெருமாள் ஸமுத்ரராஜனிடம் காட்டிய ஸாமர்த்தியம்

உண்மையில் இராமன் பரமஸமர்த்தனேயல்லது அஸமர்த்தனல்லன் என்பது அங்கே அடுத்த கதையினுல் நன்கு விளங்கும்.

அம்புதொடுக்கப் புக்கவாறே கடலரசன் அஞ்சி நடுங்கியோடிவந்து நின்றதும் அவனுடைய வேண்டுகோளுக் கிரங்கிப் பலகாத வழிக்கப் பாலிருந்த அவனது சத்துருக்களை நொடிப்பொழுதில் வென்று வருமாறு அம்புக்குக் கட்டளையிட்டு அப்படியே நடத்திவைத்ததும் காணுமிடத்துப் பெருமாளுடைய ஒப்புயர்வற்ற ஸாமர்த்தியம் எளிதிற் புலனாகுமே. ஆனால் அஸமர்த்தகார்யமான சரணாகதியை இராமன் ஏன் செய்தனன்? என்கிற வினாவுக்கு விடையிறுக்க வேண்டுவது அவசியமாகிறது. கேண்மின்.

## ஸமுத்ர சரணாகதியின் மருமம்

பெருமாள் திருவவதாரஞ் செய்தது தன்னுடைய ஒப்பில் பல் குணங்களை வெளியிடுதற்கே யன்றி மற்றொன்றுக்காக அன்றென்பது பரமார்த்தமாதலால் மிகச் சிறந்த வொரு திருக்குணத்தை வெளியிடுவதாகவே இச் சரணாகதி அமைந்தது. இராமன் கடலரசனைச் சரணாகதி செய்ததான இச்செயல் எங்ஙனம் வந்து புகுந்ததென்பதைச் சிறிது ஆராயவேணும். பெருமாள் கடற்கரை வந்து சேர்ந்தபோதே கடலைக் கடப்பது எங்ஙனம்? என்கிற விசாரணையெழுந்தது. அப்போது விபீஷணாழ்வான்வந்துசேர்வது முதலிய சில கதைகளினால் அந்த விசாரம் மறைந்திருந்து விபீஷண பரிக்ரஹம் தலைக்கட்டினபின்பு மீண்டும் அந்த விசாரமெழுந்தது. அப்போது பெருமாள் 'இவ்விஷயத்தில் நமக்கொன்றும் தெரியாது! விபீஷணனைக் கேட்பது; அவன் என்ன வுபாயம் தெரிவிக்கிறானோ அதுதான் கைக்கொள்ளத் தக்கது' என்று பணிக்க, கடல்கடக்கு முபாயஞ்சொல்லும் பொறுப்பு விபீஷணனுடையதாயிற்று. அவன் ஆலோசித்து *ஸமுத்ரம் ராகவோ ராஜா சரணம் கந்துமர்ஹதி* [பெருமாள் கடலைச் சரணம் புகவேண்டும்] என்றான். அது கேட்டுப் பெருமாள் 'எனக்கும் இவ்வுபாயமே ருசிக்கின்றது' என்று சொல்லி உடனே சரணாகதியிலிழிந்தார்—என்று கதை காண்கிறோம்.

இங்கு, விபீஷணனைக் கேட்குமாறு சொல்லக் காரணமென்ன? தன்னைவிட விபீஷணன் மேதாவியென்று திருவுள்ளமா? பிறரைக் கேட்டுச் செய்யவேணுமென்று கருத்தாகில், ஜாம்பவான் திருவடி போல்வாரான மஹா மேதாவிகள் இல்லையா? அவர்களைக் கேட்கலாமே. அவர்களையும்விட்டு விபீஷணனைக் கேட்கக் கூறினது ஏன்? அந்த விபீஷணன்தானும் பெருமாளுடைய பெருமையை உள்ளபடியறிந்தவனாயிற்றே. பெருமாளைத் தான் சரணம் புக்கபோது "ஸர்வ லோக சரண்யாய ராகவாய மஹாத்மநே" என்று சொல்லியிருக்கின்றானே. ஸர்வலோக சரண்யரென்று தான் நன்கறிந்த பெருமாளையா உவர்க்குழியைநோக்கிச் சரணாகதி செய்யச் சொல்லுவது? இவை அஸங்

தர்ப்பமாக விழுந்திருக்கின்றனவேயென்று சங்கிக்க நேரும். இவ் விடத்து மருமங்கள் கேண்மின்.

ஜாம்பவான் அனுமான் முதலான மஹாமேதாவிகள்—பழைய பக்தர்கள்—இருந்தாலும், (தத்வத்ரயம். 151) "அன்றீன்ற கன்றுக்குத் தாயிரங்கி முன்னணைக் கன்றையும் புல்லிட வந்தவர்களையும் கொம்பிலும் குளம்பிலும் ஏற்குமாபோலே பெரிய பிராட்டியாரையும் ஸூரிகளையும்விட்டு ஸ்நேஹித்துக்கொண்டுபோரும்" என்று பிள்ளை லோகாசார்யர் அருளிச்செய்த கணக்கிலே, அன்று புதிதாக வந்து பணிந்த அடியான் பக்கலிலே விசேஷித்த அன்புகாட்டுவதே பெருமாளுடைய இயல்பாகும். பிராட்டி இராவணனைக் குறித்து உபதேசஞ் செய்யுமிடத்து "விதிதஸ் ஸஹி தர்மஜ்ஞः சரணாகத வத்ஸல:" என்று சரணாகத வாத்ஸல்யத்தையே பெருமாள் பக்கலில் தான் நிலையிட்ட குணமாகக் கூறினள். அக் குணத்தை இராவணனிடத்தே காட்ட ஆசைப்பட்டிருந்த பெருமாள் அது பெறுவிட்டாலும் அவன் பின்னே பிறந்த விபீஷணனிடத்தாகிலும் அதனைக் காட்டாவிடில் தரிப்பு அரிதாகுமன்றோ. வாத்ஸல்யமென்பது இதுதானே (வத்ஸம்—கன்று.) கன்றினிடத்துத் தாய்ப்பசு காட்டுமன்பேயன்றோ வாத்ஸல்யமெனப்படுவது. முன்னணைக் கன்றுகளாகிய அனுமான் ஜாம்பவான் முதலானோரைத்தள்ளி அன்றீன்ற கன்றாகிய விபீஷணனிடத்தே விசேஷித்த அன்பு விளைந்ததுபற்றியே அவனது வார்த்தையில் கௌரவம் வைக்கத் தோன்றி அவனை உபாயங் கேட்கவேண்டிற்று.

### ஸமுத்ர சரணகதி செய்யச்சொன்ன விபீஷணனது கருத்து

இனி, விபீஷணன், ஸர்வலோகசரண்யனைத் தானறிந்த பெருமாளை ஸமுத்ர சரணாகதி செய்யுமாறு எங்ஙனே சொன்னனென்பது பற்றிக் கேண்மின்; உலகில் ஒரு நோய்க்குப் பலவகையான மருந்துகளுண்டு; எல்லாரும் ஒரே மருந்தைச் சொல்லமாட்டார்கள். ஒவ்வொருவர் ஒவ்வொரு மருந்தைச் சொல்லுவர். எவனும் தன்னுடைய அநுபவத்தில் கைகண்ட மருந்தையே பிறர்க்கும் தெரிவிப்பது இயல்பு. அதுபோலவே, விபீஷணனும்வான் தனக்கு சரணாகதியே பேறுபெறுவித்ததாகக் கைகண்டவனாதலால் 'உலகில் எந்த பேற்றுக்கும் இதுதான் உயர்ந்த (மருந்து) உபாயம்' என்று துணிந்து, ஸர்வலோக சரண்யனான இராகவனுக்கு இது தகாது என்பதை மறந்து சரணாகதி செய்வதே நலமென்று கூறினன். அவன் கூறினாலும் பெருமாள் அதை மறுக்கலாம். 'அஸமர்த்தன் செய்யவேண்டிய சரணாகதியை ஸமர்த்தன் செய்தால் அதன் முடிவு என்னாகுமென்பதை உலகம் தெரிந்துகொள்ளட்டும்' என்கிற திருவுள்ளத்தினாலேயே தாம் ஏற்றுக்கொண்டு செய்து, முடிவையும் காட்டி

நின்றார். ஆக, இதனாலும் இராமபிரானுடைய சிறந்த ஸாமர்த்தியமே ஓங்கி நின்றதாயிற்று.

## ஸ்ரீமந்நாராயணமூர்த்தியின் ஸாமர்த்தியம்.

ஸாமர்த்தியமென்னும் இச்குணத்தை இராமபிரானிடத்தி லன்றியே பொதுவாக நாராயணமூர்த்தியினிடத்தும் காணலாம். முற்காலத்தில் ஒருவன் நெடுநாள் நாஸ்திகனாக இருந்து கடவுளே இடையாதென்றும் அவையவை இயல்வாகத் தோன்றுகின்றனவென்றும் உறுதிகொண்டிருந்தான். பிறகு பல சம்பவங்களை யுற்று நோக்கி 'இப்பிரபஞ்சங்களுக்கெல்லாம் கர்த்தாவாக முழுமுதற்கடவுளென்று ஒருவன் இல்லாமலிருக்க முடியாது' என்று துணிந்தான். அவன் பிரபஞ்ச ரீதிகளையெல்லாம் பார்கக விரும்பி வெளியேறத் தொடங்கினான். சென்றுகொண்டேயிருக்கையில், சிறிய பூசனிக் கொடியில் தாங்கமுடியாத மிகப்பெரிய காய்கள் காய்ப்பதையும், மிகப் பெரிய ஆலமரத்தில் மிகமிகச் சிறுகாய்கள் காய்ப்பதையும் கண்டு "முன்பு நாம் நிச்சயித்த முழுமுதற்கடவுள் ஸமர்த்தனன்றிக்கே அஸமர்த்தன்போலும்' ஸமர்த்தனாயிருந்தால் சிறிய கொடியில் பெரிய காய்களையும், பெரிய மரத்தில் சிறிய காய்களையும் படைத்திருப்பனா!" என்று நினைத்துக்கொண்டான். அப்போது மிகக் கொடிய வெய்யிலாக இருந்தபடியால் ஆலமரத்தின் நிழலில் நன்றாக வுறங்கினான். உறங்கி யெழுந்ததும் தன் மார்பிலும் தலையிலும் பல பல ஆலங்காய்கள் விழுந்திருப்பதைக் கண்டான். கண்டதும், அவனுக்கு பகவானிடத்தில் அளவுகடந்த பக்திவிளைந்தது. 'ஐயோ! மிகப் பெரிய ஆலமரத்திற்கு மிகச்சிறிய காய்களைப் படைத்தானே யென்று அவனை அஸமர்த்தனாக நாம் நினைத்தோமே; இவை பெரிய காய்களாயிருந்தால் நம் தலையும் மார்வும் உடைந்துபோயிருக்குமே. இம்மரத்தின் நிழலில் உலகமெல்லாம் ஒதுங்குமென்றும், ஒருவர்க்கும் துன்பமுண்டாகலாகாதென்றும் திருவுள்ளங்கொண்டன்றோ அப்பெருமான் இப்பெருமரத்திற்குச் சிறு காய்களைப் படைத்தான்; அப்பெருமானுடைய ஆலோசனையும் ஸாமர்த்தியமும் யாருக்குண்டு! பூசினிக்கொடியில் பெரிய காய்களைப் படைத்ததும் குறையற்றதே; ஸர்வம்ஸஹா என்னப்படுகிற பூமியேயன்றோ அக்காய்களைத் தாங்குகின்றது. கொடிக்கு யாதும் சிரமமில்லையே. ஆகவே, கண்ணுக்குத் தெரியாத அப்பகவான் மிகவுயர்ந்த ஸமர்த்தனென்பதில் என்ன தடை!' என்று நினைத்து ஆனந்தம் பொங்கி பக்தியும் மிகுந்து வீடு சென்றான். எம்பெருமானுடைய ஸாமர்த்தியம் விரிப்பிற் பெருகும்.

# 11. ஏகப்ரியதர்சந: க:?

## இராமபிரானுடைய அழகின் விவரணம்

ஸ்ரீமத் வான்மீகிராமாயணத்தில் வான்மீகி நாரத ஸம்வாதத்தில் "க: ஸமர்த்த:?" என்கிற பத்தாவதுவினு கீழே விவரிக்கப்பட்டது. இனி "ஏகப்ரியதர்சந: க:?" என்கிற பதினேராவதுவினு விவரிக்கப்படுகிறது. எவ்வளவு காலம் பார்த்துக்கொண்டிருந்தாலும் தெகுட்டாமல் இனிமையே செல்லும்படியான பார்வையையுடையவன் யாவன்; என்பது இந்த வினுவின் கருத்து. சிறந்த அழகுடையவன் யாவன்? என்று வினவியவாறு. உலகில் அழகு மிகுந்த வ்யக்திகள் பலரை நாம் பார்ப்பதுண்டு. ஆனல் இரண்டொருநாள் பார்த்தவாறே பழகிப்போய் வெறுப்புத்தட்டிவிடுவது இயல்பு. இரண்டொருநாள் மாத்திரமே விரும்பிப் பார்ப்பதென்கிற ஸ்ப்ருஹணீயதை இருக்கும். நாளடைவில் அது மாறிப்போம். இராமபிரானுடையபடி இதுவன்று. "எப்பொழுதும் நாள் திங்களாண் டூழியூழிதொறும் அப்பொழுதைக் கப்பொழுதென்னுராவமுதமே" என்று நம்மாழ்வாரருளிச்செய்தபடி ஊழிதோறூழியோவாது பார்த்துக்கொண்டிருந்தாலும் அபூர்வக் காட்சியாகவே இருக்கும்.

## ராமநாமத்தின் பொருள் கூறுதல்

இப்படிப்பட்ட அழகு குடிகொண்டிருந்தது கண்டே வஸிஷ்ட பகவான் ராமன் என்று திருநாமம் சாத்தினன். ராமனென்கிற சொல்லானது ரமயதி என்கிற விற்பத்தியினுல் தேறும் வடசொல். தன்னழகைக் காட்டி ஓவாது களிக்கச்செய்பவன் என்பது தேறின கருத்தாம்.

## *பும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரியென்றதன் விவரணம்.

இராமனது வடிவழகில் யார்யார் எப்படியீடுபட்டிருக்கின்றுர்களென்பதை உள்ளவாறு விவரித்துக்காட்டப்புகுந்தால் மிகவிரிவாகும். ஸாரமாகச் சிலவிடங்களெடுத்துக்காட்டுவோம். அதற்குமுன், இராமனழகைப்பற்றி வான்மீகி முனிவன் வாக்கில் வெளிவந்திருப்பதைச் சிறிது பேசுகின்றேன். [அயோத்யாகாண்டத்தில்] இராமனுக்கு யுவராஜ பட்டாபிஷேகம் செய்ய நினைத்த தயரத மன்னவன் இராமனைத் தன்னிடம் வரவழைத்தான். வந்துகொண்டிருக்கிற ராமனை மன்னவன் தூரத்திலிருந்து பார்க்கும்போது அவனுள்ளம் பூரித்தபடியை வான்மீகி பேசுகிருர்; (3—28)

"சந்த்ரகாந்தாநநம் ராமம் அதீவ ப்ரியதர்சநம்,
ரூபௌதார்யகுணை: பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்;"

"ந ததர்ப்ப ஸமாயாந்தம் பச்யமாநோ நராதிப:" என்று.

"சந்த்ரகாந்தாநநம்" என்பதற்கு—சந்திரன்போலழகிய திருமுக மண்டலத்தை யுடையவன் என்று பொருள் கொள்வர் சிலர்; சந்திரனிற்காட்டிலும் அழகிய திருமுகத்தை யுடையவன் என்பதே முனிவன் கருதிய பொருளாம். "ரூபௌதார்ய குணை: பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம்" என்கிற விஷயம் முனிவனது மனத்தில் ஊறிக்கிடப்பதனாலேயே இங்கு "அதீவ ப்ரிய தர்சநம்" என்னும் வாசகம் வெளிவந்தது. இதற்குமேல் "ரூபௌதார்ய குணை: பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம்" என்றது வெகு அற்புதமான சொல். 'ராமன் வடிவழகு முதலிய குணங்களினால் எல்லாருடைய கண்ணையும் நெஞ்சையும் கவருபவன்' என்று சொல்லவேண்டியிருக்க, முனிவன் அப்படிச் சொல்லாமல் 'பும்ஸாம்' என்று விசேடித்துக் கூறியுள்ளான். [பும்ஸாம்—ஆண்களுக்கு என்றபடி.] ஆண்களுக்கு மனோஹரனே யொழியப் பெண்களுக்கு மனோஹரனல்லன் போலும் என்று சிலர் நினைப்பர். அது பிசகு. வடமொழிநூலார் 'தண்டாபூபிகா ந்யாயம்' என்று ஒரு நியாயம் கூறுவர். அதாவது, ஒரு கிழவர் தம்முடைய தடியொன்றில் வடையை மாட்டிவைத்து இரவில் உறங்கி, காலை யெழுந்து வடையுண்பதற்காகத் தடியைத் தேடினாராம்; தடி எலியினால் உட்கொள்ளப்பட்டதென்றறிந்து அதனைத் தம்முடைய தேவியாரிடம் சொல்ல, அதுகேட்ட தேவியார் 'தடிபோனால் போகட்டும்; வடையிருக்கிறதா?' என்றுகேட்க; அதற்குக் கிழவர் விடை கூறினர்—'அடி முழுமூடமே! தடியே எலியால் விழுங்கப்பட்டதென்றால்வடையைப்பற்றிக்கேட்பதுமுண்டா?'என்று. இதனையே ஸம்ஸ்க்ருதப் புலவர்கள் தண்டாபூபிகா நியாய மென்கின்றனர். இது கைமுதிக நியாயமென்றும் வழங்கப்பெறும். மேலே யெடுத்துக்காட்டிய வான்மீகியின் சுலோகம் இந்த நியாயத்தை நினைப்பூட்டுமதாகத் தோன்றியுள்ளது இராமனுடைய வடிவழகு ஆண்களின் கண்ணையும் நெஞ்சையும் கவர்கின்றதென்றால் பெண்களின் கண்ணையும் நெஞ்சையும் கவர்கின்றதென்பது சொல்ல வேணுமோ? உலகில் ஆண்கள் எவ்வளவு ஸௌந்தர புருஷர்களாயிருந்தாலும் அவர்களுடைய வடிவழகை ஆண்கள் ஒரு பொருளாக மதியார்கள். பெண்களினழகைக்கண்டு ஆண்கள் மோஹிப்பதும், ஆண்களினழகைக்கண்டு பெண்கள் மோஹிப்பதும் உலகவியல்பே யல்லது பெண்களினழகைக்கண்டு பெண்கள் மோஹிப்பதும், ஆண்களினழகைக்கண்டு ஆண்கள் மோஹிப்பதும் மேட்டுமடையே யாகும். அப்படி மோஹித்ததாகக் கூறுமிடம் கண்டால் அவ்வழகு லோகாதீதமானதென்பதே தெரிவிக்கப்பட்டதாகும்.

துரௌபதி விராட நகரத்தில் வாசஞ்செய்த காலத்து அவள் நீராடுகையில் அவளதுவடிவழகைக்கண்ட மாதர்கள் மிகவும்மோஹித்தார்களென்று மஹாபாரதத்திற் கூறப்பட்டுள்ளது. அதனால் அவளழகு லோகோத்தரமென்பதே தெரிவிக்கப்பட்டதாகிறது. அது

போலவே இங்கு இராமபிரானது வடிவழகு ஆண்களை மயக்குகின்ற தென்று கூறுகின்ற வான்மீகி முனிவர் 'இராமனது வடிவழகில் ஈடுபடாதாரில்லை' என்பதையே கூறினராவர். "கண்ணிற் காண்பரேல் ஆடவர் பெண்மையை அவாவுந்தோளினாய்" (கம்பராமாயணம்), "வாராகவாமனனே அரங்காவட்ட நேமிவலவா ராகவாஉன்வடிவு கண்டால் மன்மதனும் மடவாராக வாதரஞ் செய்வன்" (திருவரங்கத் தந்தாதி), "பெண்டிருமாண்மைவெஃகிப் பேதுறு மூலையினுள்" (சீவக சிந்தாமணி என்பனபோன்ற பல பாசுரங்கள் இங்கு நினைப்பூட்டத் தகும். இனி, இராமனது வடிவழகில் ஈடுபட்டவர்களைப்பற்றிச் சிறிது தெரிவிக்கிறேன்.

## இராமனழகில் விச்வாமித்திரனீடுபட்டது

முதலில் விச்வாமித்திர முனிவரை யெடுத்துக்கொள்வோம். இவர் தசரத மன்னவரிடம் ராமலக்ஷ்மணர்களைப் பெற்றுக்கொண்டு போகையில் ஸூரியன் அஸ்தமித்தவாறே பிள்ளைகள் உறங்கிப் போயினர். பிறகு பின்மாலையில் இராமனை யெழுப்புகின்ற முனிவர் "கௌஸல்யா ஸுப்ரஜாராமா!" என்கிறார். இது இராமபிரானை விளிப்பது. இதற்கு ஆசாரியர்கள் பலவிதமாகப் பொருள் பணிக்கின்றனர். இரண்டுவிதம் கேண்மின். கௌஸல்யா என்பதைத் தனிப் பதமாகவும் ஸுப்ரஜா: என்பதைத் தனிப்பதமாகவும் பிரித்து ஒரு பொருள் நிர்வாஹம். அவற்றை ஒரே பதமாகவே [ஸமஸ்தமாகக்] கொண்டு மற்றொரு நிர்வாஹம். ஒரே பதமாகக்கொள்ளுகிற நிர்வாஹத்தில், கௌஸல்யாதேவியின் நல்ல புதல்வனான இராமனே! என்றழைத்ததாகத் தேறுகிறது. தனிப் பதங்களாகப் பிரித்துக் காட்டுகிற நிர்வாஹத்தில் 'கௌஸல்யாதேவியானவள் நல்லபிள்ளை பெற்றவள்' என்று சொல்லிமுடிப்பதாகவாகிறது. மேலோடே அந்வயமில்லாமல் தனிவாக்கியமாக நிற்கிறது. 'இராமா! பொழுது விடிந்தது. எழுந்திரு' என்று சொல்லவேண்டிய இந்த சந்தர்ப்பத்தில் கௌஸல்யையைக் கொண்டாடுவது எதற்காகவென்று கேள்வி வரும். இங்கே நம்முடைய பூருவாசாரியர்கள் அருமருந்தன்ன ஒரு ஸ்ரீஸூக்தி யருளிச்செய்கிறார்கள் காண்மின்;—"முனிவன், உண்ணப்புக்கு வாயை மறப்பாரைப்போலே தான் அதிகரித்த காரியத்தை மறந்து, பெற்றவயிற்றுக்குப் பட்டங்கட்டுகிறவனாய், ஒரு திருவாட்டி பிள்ளை பெற்றபடி என்னே! என்று ஸ்ரீகௌஸலையாரைக் கொண்டாடுகிறான்; வடிவழகு படுத்தும்பாடு!" என்று.

இதைச் சிறிது விவரிப்போம்: ["உண்ணப்புக்கு வாயை மறப்பாரைப்போலே"] இலையில் ப்ரஸாதபணியாரங்களைப் பரிமாறியிருந்தால் உண்பதற்கு உட்கார்ந்தவன் செய்யவேண்டிய காரிய

மென்ன? அவற்றைத் திரட்டியெடுத்து உட்கொள்வதுதானே செய்ய வேண்டும். அது செய்யாதே 'இந்தப் பணியாரம் யார் பண்ணினது? எப்படிப் பண்ணினது? எதுகொண்டு பண்ணினது? என்று இங்ஙனே சில விசாரங்கள் செய்துகொண்டு கிடந்தானாகில் அவன் அந்த பணியாரத்தின் அமைப்பிலேயே மிக ஈடுபட்டுவிட்டான் என்று தெரிந்துகொள்ளலாமன்றோ. அதுபோலவே ப்ரக்ருதத்தில் விச்வாமித்ர முனிவன் இராமனை யெழுப்பி யழைத்துக்கொண்டு போக வேண்டிய காரியம் முக்கியமாயிருக்க, அதைவிட்டு இப்படி யழகிய பிள்ளையைப்பெற்ற கௌஸல்யாதேவி என்ன நோன்பு நோற்றாள் கொலோவென்று அவனைக்கொண்டாடத் தொடங்கிவிட்டான். இது இராமனது அழகு படுத்தினபாடு என்பது தவிர வேறென்ன சொல்ல முடியும்?

## மிதிலாபுரியார் இராமனழகிலீடுபட்ட விதம்

இராமன் மிதிலாபுரியில் திருவீதி வலம் வருங்காலத்து அவனைக் கண்ட மாதர்களின் தன்மையை வருணிக்கின்ற கம்பர்,

"தோள்கண்டார் தோளே கண்டார் தொடுகழற் கமலமன்ன
தாள்கண்டார் தாளே கண்டார் தடக்கை கண்டாருமஃதே,
வாள்கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக்கண்டார்,
ஊழ்கண்ட சமயத் தன்னா னுருவு கண்டாரை யொத்தார்,"

என்று கூறுகின்றார்.

இராமனது ஓரோரவயவத்தின் அழகைக்கண்டவர்கள் மற்றோரவயவத்தில் கண் செலுத்தமாட்டாதவர்களாயினர் என்று சொன்னதினால் திவ்யமங்கள விக்ரஹஸௌந்தரியம் ஒப்புயர்வற்றதென்று தெரிவிக்கப்பட்டதாயிற்று.

## குலசேகராழ்வார் காட்டின இராமனழகு

இராமனது அழகைத் தசரதமன்னன் அநுபவிக்கும்படியைக் குலசேகராழ்வார் கூறியிருப்பது வெகுசிறப்பானது. பெருமாள் திருமொழியில் (9—4.) *வா போகு வா வின்னம் வந்தொருகால் கண்டுபோ' என்ற பாசுரம் அமைந்திருக்குமழகு அற்புதம். தயரதன், சுமந்திரன் முதலானாரையிட்டு இராமனை வரவழைப்பன். முன்னழகை ஸேவிப்பதில் ஆசையினால் வா என்பன்; முன்னிலும் பின்னழகிய பெருமாளாகையினாலே பின்னழகை ஸேவிக்கக் கருதி போகு என்பன். மறுபடியும் முன்னழகை ஸேவிக்க விரும்பி மீண்டும் வா என்பன். இப்படி மாறிமாறி அழகை ஸேவிக்கப்பெற்றதனாலே பிச்சேறி 'இன்னம் வந்தொருகால் கண்டுபோ' என்பன். இப்படி

எவ்வளவு பார்த்தும் த்ருப்தியே பிறக்கவில்லையென்பதை வான்மீகி கூறிமுடித்தார் 'ந த்ருப்தி ஸமாயாந்தம் பச்யமாநோ நராதிப:' என்று.

### இராமனழகில் அரண்யவாஸிகளுமீடுபட்டது

இதெல்லாம் கிடக்கட்டும்; அழகில் ஈடுபடவறியாத அரண்ய வாஸிகளும் இராமனது வடிவழகைக் கண்டு வியந்தனரென்பதை ஆரணியகாண்டம் முதல் ஸர்க்கத்தில் வான்மீகி வியந்து கூறுகின்றார்;

"ரூபஸம்ஹநநம் லக்ஷ்மீம் ஸௌகுமார்யம் ஸுவேஷதாம்,
தத்ருசுர் விஸ்மிதாகாரா ராமஸ்ய வநசாரிண:"

என்பது அங்குத் தலையான சுலோகம். இதில் 'வநவாஸிந:' என்றும் 'வநசாரிண:' என்றும் பாடபேதமுள்ளது. ஆடுமாடுகளுமுட்பட வியந்து கண்டனவாம் இராமனது வடிவழகை. இதுதானும் கிடக்கட்டும். மூக்கும் காது மறுப்புண்டு கதறியழுதுகொண்டே கரதூஷணுதிகளிடம் செல்கின்ற சூர்ப்பணகை, இரண்டு படுபாவிகள் என்னை இப்பாடுபடுத்தினர்' என்று வையவேண்டிய வாய் கொண்டு சொல்லியிருப்பன பாரீர்:

### இராமனழகில் சூர்ப்பணகையின் ஈடுபாடு

"தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாபலௌ,
புண்டரீகவிசாலாக்ஷௌ சீரக்ருஷ்ணாஜிநாம்பரௌ,
கந்தர்வராஜப்ரதிமௌ பார்த்திவவ்யஞ்ஜநாந்விதௌ"

என்று வாயாரச் சொல்லுகிருள். இராமனிடத்துப் பரமப்ரீதி கொண்ட அயோத்யாவாஸிகளின் வாக்கிலும் இங்ஙனே வெளிவரக் கண்டதில்லை.

### இராமனழகில் வாலியீடுபட்டுப் பேசியது

வாலியும் இராமபாணம்பட்டுத் தான் முடிந்துபோகுந்தருணத்திலே இராமனேடு தர்க்கிக்கும்போதும் "ஓவியத் தெழுதவொண்ணுவுருவத்தாய்!" என்று விளிக்கின்ருன். நம் இஷ்டப்படி அவித்தவித்து அழகுபெற எழுதக்கூடியது சித்திரம்; அச்சித்திரத்திலுங்கூட எழுதவொண்ணுததாம் இராமனது திருவுருவம்.

### இராமனழகில் திருவடி யீடுபட்டது

மாருதி இராமனைக்கண்ட காட்சியிலே "ஆயதாச்ச ஸுவ்ருத்தாச்ச பாஹவ: பரிகோபமா:, ஸர்வபூஷணபூஷார்ஹா:" என்று தோளழகிலே நெஞ்சைப் பறிகொடுத்துப்பேசுகிருன். 'மஞ்செனத்திரண்ட கோலமேனிய மகளிர்க்கெல்லாம், நஞ்செனத்தகையவாகி நளிரிரும் பனிக்குத் தேம்பாக்க, கஞ்சமொத்தலர்ந்த கண்ண!' என்றதாகக் கம்பர் கூறுகின்ருர்.

## இராமனழகில் பிராட்டியினீடுபாடு

அசோகவனத்தில் புலம்பாநின்ற பிராட்டியும் இராமனது வடிவழகையும் கண்ணழகையும் நடையழகையுமே. சொல்லிச் சொல்லிக் கதறுகின்றாள் ;—

"தம் பத்மதளபத்ராக்ஷம் ஸிம்ஹவிக்ராந்தகாமிநம்,
தந்யா: பச்யந்தி மே நாதம் க்ருதஜ்ஞம் ப்ரியவாதிநம்"

என்றவிந்த ஒருச்லோகத்தைச் சிந்தை செய்மின். இதில் "பத்ம தளபத்ராக்ஷம்" என்றதற்கு இன்சுவைப் பொருளைப் பெரியோர் கூறுவர்; இங்கு பத்மதளமென்றோ பத்மபத்ரமென்றோ ஒன்று சொன்னால் போதும்; தளமும் பத்ரமும் பரியாயமாகையாலே. 'தளபத்ராக்ஷம்' என்று இரண்டையும் கூட்டிச் சொன்னது ஏன்? என்று விசாரம் செய்யப் பிராப்தமாகும். நம்மாழ்வார் திருவாய்மொழியில், *செங்கமலத் தலர்போலும் கண்கைகால் செங்கனிவாய் அக்கமலத்திலை போலுந் திருமேனியடிகளுக்கே* என்றருளிச் செய்தது மேலேகுறித்த வான்மீகி வாக்கைத் தழுவியே யென்பர் பெரியோர். எங்ஙனேயென்னில்; வடமொழியில் அக்ஷமென்கிற சொல்லுக்கு "அக்ஷமிந்த்ரியகாயயோ:" என்கிற நிகண்டின்படி இரண்டு பொருள்களுண்டு—கண்ணென்றும் வடிவென்றும். இரட்டுறமொழிதலென்னும் தமிழ் மரியாதையினால் "பத்மதள பத்ராக்ஷமென்ற விவ்விடத்தில் அக்ஷபதத்திற்கு இவ்விரண்டு பொருளும் கொள்ளத் தகும். பத்மதளம்போன்ற கண்ணழகு உடையவர்; பத்மபத்ரம் போன்ற [அதாவது தாமரையிலை போன்ற] திருமேனியையுடையவர் என்றதாயிற்று மேலேகுறித்த நம்மாழ்வார்பாசுரம் இதற்குச் சார்பாயிருக்கின்றதன்றோ.

## மனத்துக்கினியானென்று ஆண்டாள் திருநாமஞ்சாற்றியது

கண்ணபிரானையே காதலிக்குமவளான ஆண்டாளும் இராமனுக்கு மனத்துக்கினியானென்று திருநாமம் சாத்துகின்றாள். திருப்பாவையில் "சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற மனத்துக்கினியான்" என்றருளிச் செய்தது காண்க. "பொல்லா வரக்கனைக் கிள்ளிக் களைந்தானை" என்று (அவ்வாண்டாளே) அருளிச்செய்தபடி அவலீலையாகக் கொன்றொழிக்கவேண்டிய இராவணனை இராமன் மிகவும் தாமதித்து ப்ரயாஸப்பட்டுக் கொன்றதாகக் கதை காண்கிறது. அதன் காரணத்தையும் விவரிப்பது போன்றுள்ளது "சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற மனத்துக்கினியான்" என்ற ஆண்டாள்பாசுரம். இதன் உட்கருத்து என்னென்னில்; *பஞ்சென்னச்சிவக்குமென்காற் பாவை

யைப் பிரித்தபாவி வஞ்சனான இராவணனைக் கொன்றொழித்தேவிட வேணுமென்கிற திருவுள்ளம் இராமனுக்கிருந்ததாகில், கடலில் அணைகட்டி இலங்கைக்கு வரவேணுமென்பதுமில்லை; தன் அழகைக் காட்டியாவது அவனை வசப்படுத்திக் கொள்ளவேணுமென்கிற திருவுள்ளமே இராமனுக்கிருந்தது. 'சூதனாய்க் கள்வனாகித் தூர்த்தரோடிசைந்த காலம், மாதரார்கயற்கணென்னும் வலையுட்பட்டழுந்துவேனைப் போதரேயென்று சொல்லிப் புந்தியிற் புகுந்து தன்பா, லாதரம் பெருகவைத்தவழகன்' (திருமாலை) என்றபடி எப்படிப்பட்ட விமுகர்களையும் தன்பாலீடுபடுத்திக் கொள்ளவல்ல அழகு தனக்கிருப்பதனால் அவ்வழகைக் காட்டி இவ்வரக்கனையும் மயக்கி விடலாமென்கிற மயக்கமே இராமனுக்கிருந்தது. இவ்வழகை அப்பாவி மதித்திலனாகையாலே சினமுண்டாயிற்று; அந்தச் சினத்தினால் இனியிவனை உயிரோடு வைக்கலாகாதென்று செற்றனன்; அவன்றான் மனத்துக்கினியான்—சித்தாபஹாரியான அழகையுடையவன் என்பது ஆழ்ந்த கருத்து.

### அன்பர்களை விரும்பிக் காண்பவனென்றும் பொருள்

"ஏகப்ரியதர்சந:" என்கிற மூலத்திற்கு இவ்வளவாகவுரைத்த பொருள் 'இராமன் இனிமையாகக் கண்டுகொண்டிருக்கத் தக்கவன்' என்பதாகக்கொண்டு. இனி இச்சொல் மற்றொருவகையாகவும் பொருள்படும். இராமனைப் பிறர்காண்பது இனிது என்கிற பொருள் போலவே 'இராமன் பிறரைக் காண்பது இனிது' என்கிற பொருளும் பொருந்துமாதலால் அப்பொருளும் இங்குக் கொள்ளத்தகும். அயோத்யாகாண்டத்தில் (17—14) அற்புதமானவொரு ச்லோகமுள்ளது; அதாவது:

"யச்ச ராமம் நபச்யேத் து யஞ்ச ராமோ ந பச்யதி
நிந்திதஸ் ஸ வஸேல்லோகே ஸ்வாத்மாப் யேநம் விகர்ஹதே"

என்று. இதன் பொருளாவது—இராமனைக் காணாதவனும் இராமனால் காணப்படாதவனும் உலகில் நிந்திக்கத்தக்கவனாவன்; உலகத்தார் நிந்திப்பது கிடக்கட்டும்; தன்னைத்தானே நிந்தித்துக் கொள்ள வேண்டியதுமாகும் என்றபடி இதனால் இராமனைக் காண்பதுபோல இராமனால் காணப்பெறுவதும் புருஷார்த்தமென்று தேறுதலால், ஏகப்ரியதர்சந: என்பதற்கு 'இராமன் பிறரைக் காண்பது மிகவும் இனிதாயிருக்கும்' என்று கருத்துக்கொள்வதும் பொருத்தமுடைத்தாம். இதற்குச் சார்பாக ஓரிடங் காட்டுவோம்; இராமன் சபரியினுடைய ஆச்ரமத்திற்கெழுந்தருளி அவளைக் கடாக்ஷித்தருளினவாறே அவள் கூறுகின்றாள்—

" சக்ஷுஷா தவ ஸௌம்யேந பூதாஸ்மி ரகுநந்தந!"

என்று. 'இராமா! உன்னுடைய குளிர்ந்த கடாக்ஷவீக்ஷணம் என் மீது பட்டவாறே நான் பரம பரிசுத்தி பெற்றவளாயினேன் என்றாள். திருப்பாவையில் "அங்கணிரண்டுங்கொண்டு எங்கள்மேல் நோக்குதியேல் எங்கள்மேற் சாபமிழிந்தேலோரெம்பாவாய்" என்றருளிச் செய்த பாசுரமும் இதற்குச் சார்பாக நோக்கத்தக்கது.

ஆக, விரும்பிக்காணத்தக்க அழகுடையான் என்றும், அன்பர்களை விரும்பிக் காண்பவன் என்றும் இருவகையான பொருளையும் விவரித்தோமானோம். .... .... .... .... *

---

## 12. "ஆத்மவாந் க:?"

### ஆத்மபதத்தின் ஐந்து பொருள்கள்

ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தில் வான்மீகி நாரத ஸம்வாதத்தில் 'ஆத்மவாந் க:?' என்கிற பன்னிரண்டாவது வினா விவரிக்கப்படுகிறது. ஆத்மவாந் என்பதற்கு ஆத்மாவையுடையவன் என்று பொருள். ஆத்மா என்பதற்கு ஐந்து பொருள்கள் வடமொழி நிகண்டுகளில் கூறப்பட்டுள்ளது; "ஆத்மா ஜீவே த்ருதௌ தேஹே ஸ்வபாவே பரமாத்மநி" என்னும் நிகண்டுவை முன்னோர்களான வியாக்கியான கர்த்தாக்கள் (ஸ்ரீகோவிந்தராஜர்) எடுத்துக்காட்டியுள்ளார்கள். அவ்வைந்து பொருள்களாவன—ஜீவாத்மா, தைரியம், உடல், இயல்பு, பரமாத்மா என்பன. இவ்வைந்து பொருள்களும் இராமபிரானிடத்துப் பொருந்துமாற்றை இனி விளக்குவோம். ஜீவாத்மாக்களையுடையவன் என்பது முதற்பொருள். பரமாத்மா ஒருவனேயுளனென்றும் மற்று சேதநா சேதநப்பொருள்கள் கிடையாவென்றும் அவையுள்ளதாகத் தோற்றுவது மாயாவிலஸிதமென்றும் ஒரு சாராருடைய கொள்கையுளது. அங்ஙனல்லாமல் இராமன் பரமாத்மாவாயிருந்துகொண்டு ஸகல ஜீவாத்மாக்களையும் அடிமையாகக் கொண்டவன் என்றபடி. ஜீவாத்மாக்களையுடையவன் என்கிற பொருள் தவிர ஜீவாத்மாவாயிருக்குந் தன்மையையுடையவன் என்கிற பொருளும் ஏற்கும். [ஆத்மவாந் என்றது ஆத்மத்வவாந் என்றபடி.] ஸ்ரீமந்நாராயணமூர்த்தியே இராமனாக அவதரித்தானென்று பரமார்த்தமிருக்கச் செய்தேயும் *பிதரம் ரோசயாமாஸ* என்றும் *ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தசரதாத்மஜம்* என்றும் சொல்லுகிறபடியே மநுஷ்யயோனியிலே பிறந்து தசரதாத்மஜனாக ஒரு ஜீவாத்ம பாவத்தைத் தன்பால் ஆவாஹனம் செய்து கொண்டானாகையாலே அதற்குச் சேருமிப்பொருள். ஸகலாத்மாக்

களுக்கும் சேஷியாய் (அதாவது) அனைவரும் தனக்குச் செய்யும் கைங்கரியங்களைக் கொள்ளுமவனும் ஆனதுபற்றியே பரமாத்மா வாயிருப்பவனான ஸர்வேச்வரன் இராமனாய்த்தோன்றி, தான் கைங் கரியஞ் செய்யும் ஜீவாத்மாவாயினன் என்க. யாருக்குக் கைங்கரி யம் செய்தானென்னில்; இது கேண்மின்.

## இராமனுடைய கிங்கரத்தன்மை

விச்வாமித்ரமுனிவன் தான் ஒரு வேள்வி செய்வதாகத் தொடங்கி அதனை இடையூறின்றி நிறைவேற்றுதற்பொருட்டுத் தசரதமன்னவனிடம் வந்து இராமனைத் தருகவென்று இரந்தனன். அதற்குத் தசரதன் உடன்படவில்லை. அரக்கர்களோடு போர்புரியத் தக்க பருவமின்றிக்கே மிக இளையவனான என் சிறுவனை நான் உன்னோடு அனுப்பமாட்டேன் என்றனன். அதற்கு முனிவன் மன்னவனை நோக்கி 'இவனது பெருமையை நீ அறிந்திலை; அறப் பெரியோனான இவனை மிகச் சிறியவனாக நீ நினைக்கிறாயத்தனை: "வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்" என்று வேதமோதின மஹாபுருஷ னன்றோ இவன்; இவனை யுள்ளபடியே யானறிவேன்; நான்மாத்திர மல்ல; இதோ உன்னெதிரில் வீற்றிருக்கின்ற நற்றவ மாமுனிவர் களும் நன்கறிவர்' என்று இனைய பலவுஞ்சொல்லி ஸ்ரீராமலக்ஷ்மணர் களைக் கொண்டு சென்றான். தந்தையாரிடம் இங்ஙனே முனிவன் பேசின பேச்சுக்களையெல்லாம் ஏகாந்தத்தில் கேட்டுக்கொண்டிருந்த ராமன் 'சேஷபூதனாய்ப் பரதந்திரனாய் வந்து பிறக்கவேணுமென் றாசைப்பட்டு வந்து பிறந்த நம்மை இவர் பரமாத்மாவென்று வெளி யிட்டு விட்டாரே! இது நமது நினைவுக்குத் தகுதியன்றே; மேலும், இந்த விச்வாமித்திரர் இதுவரையில் எத்தனையோ அரிய பெரிய வேள்விகளையும் தவங்களையும் இயற்றியிருக்கிறார்; அப்போது ஒரு வரையும் துணைவேண்டினவரல்லரிவர்; இப்போது இவர் மிகச் சிறி தாகச் செய்ய நினைத்திருக்கிற ஆறு நாளைய வேள்விக்குத் துணை வேண்டிவந்தது வெறுமனல்ல; ஏதோவொரு விசேஷத்திற்காகத் தானிருக்கவேண்டும்; நம்மை ஏவிக் காரியங்கொள்ள நினைத்தே (அதாவது) நாம் ஆசைப்பட்ட சேஷத்வத்தை உலகமறியச் செய்வ தற்கே நம்மை வேண்டிவந்தார் போலும்' என்று எண்ணி இராமன் அம்முனிவரிடம் ஒன்று விண்ணப்பஞ் செய்தான்;—

"இமௌ ஸ்ம முநிசார்தூல! கிங்கரௌ ஸமுபஸ்திதௌ
ஆஜ்ஞாபய யதேஷ்டம் வை சாஸநம் கரவாவ கிம்."

என்றான்; இதன் பொருளாவது, முனிஸார்வபௌமரே! நானும் என் தம்பியான லக்ஷ்மணனும் உமக்குப் பணிவிடை செய்ய வந்தவர் கள், எப்போதும் உமதருகிலேயே யிருந்து நீர் ஏவும் குற்றேவல்

களைச் செய்ய நாங்களிருவரும் காத்திருக்கிறோம் ; நீர் கூசாமல் எங்களுக்கு எவ்விதமான கட்டளையும் செய்யலாம். உமக்கு என்ன பணிவிடை செய்யப்பெறுவோமென்று எதிர்பார்த்திருக்கிறோம் என்றபடி.

### கிங்கர சப்தார்த்த விவரணம்

இந்த ச்லோகத்தில் பிரயோகிக்கப்பட்டுள்ள 'கிங்கர' பதம் மிகச்சிறந்தது ; 'என்செய்வேன் !' 'என்செய்வேன் !!' என்று கைகூப்பி நிற்பனுக்குக் கிங்கரனென்று பெயர். அல்லது, 'என் செய்தான் ! என்செய்தான் !!' என்று ஸ்வாமியினால் புகழப்படுமவன் கிங்கரன் என்றலுமுண்டு. இப்படிப்பட்ட கிங்கரனென்னுஞ் சொல்லை யேற்றுக்கொண்டு பணிவிடை செய்யுந்தன்மை தனக்குண்டென்று காட்டுவதற்கே இராமபிரான் விச்வாமித்ர முனிவனைத் தனது தந்தையிடம் வரவழைத்துத் தன்னைத் துணைவேண்டும்படி செய்துகொண்டனன் என்று தத்துவம் அறியக்கிடக்கின்றது. ஆக, கைங்கரியம் செய்வதென்பது ஜீவாத்மாவின் தன்மையாதலால் இப்படிப்பட்ட ஜீவாத்மத்வத்தையும் இராமபிரான் உடையவனென்பது பற்றியே 'ஆத்மவாந்' என்னப்பட்டனன் என்றதாயிற்று.

### ஆத்ம சப்தார்த்தமான தைரியத்தின் விவரணம்

இனி, ஆத்மா வென்பதற்கு இரண்டாவது பொருள் தைரியமென்பது ; அதனையுடையவன் இராமன். தைரியமாவது துணிவு ; எதற்கும் சளைக்காமல், கொண்ட கொள்கையை நிறைவேற்றியே நிற்கவல்ல மனவுறுதியே யாகும் அது. இதனை நாம் ஸ்ரீராமாயணத்தில் பலவிடங்களில் பார்க்கலாம். ஆனாலும் ஒரிடமெடுத்துக்காட்டுவோம். விபீஷணனும்வான் இராவணனால் திரஸ்கரிக்கப்பட்டு "த்யக்த்வா புத்ராம்ச்ச தாராம்ச்ச ராகவம் சரணம் கத:" என்று வந்து சேர்ந்தபோது வானரவீரர்கள் பெரும்பாலர் 'இவன் இராவணனது தம்பி, இவ்விடத்து உளவறிந்துகொண்டுபோக வந்தவனே யல்லது உண்மையான பக்தியுடன் வந்தவனல்லன் ; இவனை நாம் சேர்த்துக்கொள்ளவேகூடாது ; சேர்த்துக்கொண்டால் குடிகெட்டுப்போய்விடும்' என்றிப்படி பலவாறு தடைமொழிகளைச் சொல்லி ஒரேபிடிவாதமாய் நின்றனர். அப்போது இராமன் அத்தடைமொழிகளுக்கெல்லாம் மறுப்புரைத்து சரணாகத பரித்ராணம் செய்தேதீருவேனென்று பேசினன். அப்படி பேசியுங்கூட மறுபடியும் ஸுக்ரீவ மஹாராஜன் நிலைநின்று பல ஹேதுக்களைப் பகர்ந்து 'இவனைச் சேர்த்துக்கொள்ளவே கூடாது' என்று வலிதாக ஆக்ஷேபித்தனன். அவ்வாக்ஷேபம் குரங்குகளோடு நில்லாமல், இளையோனாகிய லக்ஷ்மணனுங்கூட அவ்வாக்ஷேபத்தில் கலந்துகொண்டனன் ; அதனை வால்மீகிமுனிவர்,

" ஏவமுக்தஸ் து ராமேண ஸுக்ரீவஸ் ஸஹலக்ஷ்மண:,
உத்தாயேதம் மஹாப்ரஜ்ஞ: ப்ரணதோ வாக்யமப்ரவீத்."

என்ற சுலோகத்திஞல் காட்டியுள்ளார். இப்படி இளையபெருமாளு முட்படப் பலரும் ஆக்ஷேபிக்கச்செய்தேயும், பெருமாள் தாம் பக்த பராதீனராகையாலே இவர்களை அநுவர்த்திக்கவேண்டி யிருக்கச் செய்தேயும் தம்முடைய மனவுறுதியில் நின்று எள்ளளவும் தளர்ந் திலர், அப்போது அவர் சொன்னவார்த்தைகள் அவருடைய ஆச்சரிய மான தைரியத்தை வெளிக்காட்டி நின்றன. அவற்றுள் ஒரு சுலோகம் கேண்மின் ;

" பிசாசாந் தாநவாந் யக்ஷாந் ப்ருதிவ்யாஞ்சைவ ராக்ஷஸாந்,
அங்குல்யக்ரேண தாந் ஹந்யாம் இச்சந் ஹரிகணேச்வர."

இதன் பொருளாவது—ஸுக்ரீவ ! இந்த விபீஷணனை நாம் சேர்த்துக் கொண்டால் நமக்கு ஏதோ பிரளயமான அபாயம் நேர்ந்துவிடும் என்றன்றே நீ நினைத்திருப்பது ; இந்தவொரு ராக்ஷஸனல்ல ; பூமண் டலம் முழுவதிலுமுள்ள ஸகல ராக்ஷஸர்களு மொன்றுகூடி மற்று முள்ள பிசாச தானவ யக்ஷாதிகளையும் துணைகூட்டிக்கொண்டு வரட் டும் ; அசுரராக்ஷஸப் பூண்டுகளத்தனையும் ஒன்றுசேர்ந்து எதிரிட்டு வந்தாலும், எனக்கு வில் வேண்டா, அம்புகள் வேண்டா, கையும் வேண்டா ; ஒரு சுண்டுவிரல் நுனியிஞல் அந்த சத்துருவர்க்கமனைத் தையும் அவலீலையாகக்கொன்று தொலைப்பேன்காண் ; அவலீலை யென்றுலென்ன ; [இச்சந்] கேவலம் இச்சாமாத்திரத்திஞல் (அதாவது ஸங்கல்பமாத்திரத்திஞல்) தொலைத்திடுவேன் என்றபடி.

ஆக இப்படிப்பட்ட தைரியத்தை வெளியிட்டுத் தம்முடைய வுறுதியில் நின்று சிறிதும் வழுவாமே நழுவாமே நின்று சரணுகத பரித்ராணத்தைச் செவ்வனே செய்துமுடித்தவராதலால் இத்தகைய துணிவுடையவர் என்பது ஆத்மவாந் என்றதன்பொருளாகும்.

## ஆத்ம சப்தார்த்தமான தேஹமுடைமையின் விவரணம்

இனி ஆத்மாவென்பதற்கு மூன்ருவது பொருள் தேஹமென்பது. தேஹமுடையவன் யாவன் ? என்று கேட்கிறவாறு. உலகில் தேஹி களாகப் பிறக்கின்றவர்கள் யாவரும் தேஹமுடையவர்களாயிருக்க, இப்படியொரு கேள்வி கேட்கவேணுமோவென்று தோன்றும். கேண் மின் ; உபநிஷத்துக்களில் சில மூலைகளில் பகவானுக்குக் கையில்லை, காலில்லை, கண்ணில்லை, காதில்லை, உடலேயில்லை என்று ஓதிக்கிடக் கிறது. *அபாணிபாதோ ஜவநோ க்ரஹீதா பச்யத்யசக்ஷுஸ் ஸ ச்ருணேத்யகர்ண:* என்றும் *அசக்ஷுச் ச்ரோத்ரமபாணிபாதம்* என்றும். இதுகொண்டு சில மதாந்தரஸ்தர்கள் பகவானுக்குச் செவி வாய் கண் மூக்குடலில்லை

யென்று பிரவசனம் செய்துவருகிறார்கள். ஆனால் அந்த வேதங்களி லேயே "விச்வதச்சக்ஷுருத விச்வதோமுகோ விச்வதோஹஸ்த உத விச்வதஸ்பாத்" என்றும் "ஸஹஸ்ரசீர்ஷா புருஷஸ் ஸஹஸ்ராக்ஷஸ் ஸஹஸ்ரபாத்" என்றுமுள்ள பகுதிகள் அந்த பகவானுக்கு ஆயிரமாயிரமான வுறுப்புகளிருப்ப தாக அறைகின்றன. உறுப்புகளில்லையென்று ஒருபுறம் சொல்லு வதும், ஆயிரக்கணக்கான வுறுப்புகளுள்ளனவென்று மற்றொருபுறம் சொல்லுவதுமா யிருந்தால் இது முரணான பேச்சன்றோ; யதார்த்த வாதியான வேதம் இப்படி முரணாகப் பேசலாமோ? பகவானுக்கு தேஹமுண்டா இல்லையா? உண்டானால் உண்டென்று சொல்லுவது, இல்லையானால் இல்லையென்று சொல்லுவது; இரண்டுவிதமாகவும் பிரிச்சொன்னால் இது பொருத்தமாக இல்லையே! என்று சாமானி யர் சிந்திப்பதுண்டு. இங்கு உண்மை யென்னவென்றால், நம்போல் வார் பெற்றிருக்கின்ற—பெறுகின்ற தேஹங்களானவை கருமமடி யாக (அதாவது, புண்யம் பாபமென்கிற இருவினைப் பயனாக) நேரு மவை; பகவான் கொள்ளுகின்ற தேஹங்கள் அப்படி கர்ம நிபந்தன மன்றிக்கே "இச்சாக்ருஹீதாபிமதோருதேஹ:" என்று பராசரமஹர்ஷி பணித்தபடியே அடியார்களின் இச்சையையும் தன் இச்சையையும் அநுஸரித்துக் கொள்ளப்படுமவை. அன்றியும் "உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாயிமையோர் தலைவா!" (திருவிருத் தம்—1) என்று ஆழ்வாரருளிச்செய்கிறபடியே ஸம்ஸாரி சேதந ஸம் ரக்ஷணார்த்தமாகக் கருணையாலே கொள்ளப்படுமவை.

ஆக, பகவானுக்கு தேஹமில்லையென்று சொல்லுமிடங்கள் நல்வினை தீவினைப் பயனான தேஹமில்லை யென்றன; பகவானுக்கு தேஹமுண்டென்று சொல்லுகிறவிடங்கள் கருணையடியான அப்ராக் ருததேஹமுண்டென்கின்றன. ஆதலால் ஒரு விரோதமுமில்லையென்று வேதாந்திகளின் நிர்வாஹம். இதையுட்கொண்டே வான்மீகிமுனிவர் ஆத்மவாந் க:—திவ்ய தேஹமுடையவன் யாவன்? என்று கேட்கிற படி. ஆண்களையும் பெண்ணுடையுடுக்கச் செய்யவல்ல பரமஸுந் தர விலக்ஷண திவ்யமங்கள விக்ரஹமுடையவன் யாவன்? என்று கேட்டவாறுமாம்.

### ஆத்மசப்தார்த்தமான ஸ்வபாவமுடைமையின் விவரணம்

இனி ஆத்மாவென்பதற்கு நான்காவது பொருள் ஸ்வபாவ மென்பது. ஸ்வபாவமுடையவன் யாவன்? என்று ஒரு கேள்வி யுண்டோ? இது அஸம்பாவிதமான கேள்வியாதலால் இதன் கருத்தை வேறுவிதமாகக் கொள்ளவேணும்; எவ்விதமான ஸ்வபாவ முடையவன்? என்று கேட்பதாகக் கொள்ளவேணும்.

பரதாழ்வான் சித்திரகூடத்தில் வந்து இராமனைத் திருவயோத் திக்கு மீண்டெழுந்தருளவேணுமென்று வேண்டிக்கொண்டபோது

பெருமாள் அது முடியாதென்ன, அப்போது வஸிஷ்ட முனிவன் சொல்லுகிருன் பெருமாளை நோக்கி—

"பரதஸ்ய வச: குர்வந் யாசமாநஸ்ய ராகவ!
ஆத்மாநம் நாதிவர்த்தேதாஸ் ஸத்யதர்மபராக்ரம."

என்று. இந்த ச்லோகத்தின் பொருளைத் திருவாய்மொழியீட்டில் (2—7—4) "தேவுந்தன்னையும்" என்றவிடத்து நம்பிள்ளையருளிச் செய்கிருர் காண்மின் ;—"தேவு மென்கிறது ஐச்வர்யத்தை; தன்னை யென்கிறது ஆச்ரிதபாரதந்த்ர்யத்தை; அதிறே தானுன தன்மை. 'ஆத்மாநம் நாதிவர்த்தேதா:' என்ருனிறே, 'ஆத்மபூதம் பரதம் நாதி வர்த்தேதா:' என்கிருனென்று சிலர் சொல்லுவர்கள். பட்டர், நீரான தன்மையாகிறது ஆச்ரித பரதந்த்ரராகை. உம்முடைய தம்பி சொன்ன வார்த்தையை மறுத்து நீரானதன்மையை இழவாதே கொள்ளுமென்கிருனென்று." என்கிறவிது ஈட்டு ஸ்ரீஸூக்தி. இதனுல் தேறுகிறது என்னென்னில்; அடியார்களிட்ட வழக்காயிருக்கை யாகிற ஆச்ரித பாரதந்திரியமே இராமனுக்கு இயற்கை என்பதாம். ஆக, பக்த பராதீநனுனவன் யாவன்? என்று கேட்டபடியாகிறது. இராமன் பக்த பராதீனனுயிருந்து செய்த செயல்களைச் சொல்லும் என்று நாரதமுனிவரை வான்மீகி கேட்டதாக ஆயிற்று. இராமன் அங்ஙனம் பக்த பராதீனனுயிருந்து செய்த செயல்களில் ஒன்று சொல்லுகேன் கேண்மின் ;

### ப்ரஸங்காத் வாலிவதத்தின் உபபாதநம்

இராமன் வாலிவதம் செய்த செயல் உலகப் பிரசித்தம். அவனை வதஞ்செய்யவேண்டிய குற்றமிருந்துதான் பெருமாள் வதஞ் செய்தார் என்பது உண்மையாயினும், உலகில் குற்றவாளனைத் தண்டிக்கின்ற பிரபுக்கள் அவனை நேரில் வரவழைத்து விசாரித்துத் தண்டிப்பதுண்டேயல்லது எதிர்த்தலையின் சொல்மாத்திரமே கொண்டு வதஞ்செய்துவிடுவதில்லை; அந்த முறையில் பெருமாள் வாலியை நேரில் விசாரித்தே செய்திருக்கவேண்டும். அப்படி செய்ததாக ஸ்ரீராமாயணத்திற் காணவில்லை. கீழே கபந்தவதம் செய்தபோது அவன் விமானத்திலிருந்துகொண்டு ஸுக்ரீவனுடைய நன்மையையும் வாலியினுடைய தீமையையும் சொல்லியிருக்கிருன்; அவன் பொய் சொல்லியிருந்தானுகில் அவனை விமானம் தாங்கி நிற்காது. தாங்கி நின்றபடியால் கபந்தன் சொல்லுவது ஸத்யந்தா னென்கிற நம்பிக்கை இராமனுக்குத் திடமாக வுண்டாயிற்று. அதனுல் ஸுக்ரீவனிடத்திலே சிறந்த மதிப்புவைத்து அவனைப் பரமபக்தனுகத் திருவுள்ளம்பற்றி அவனுக்குப் பரதந்திரனுய் அவன் சொற்படி (அல்லது அவனுடைய உகப்புக்காக) வாலிவதம் செய்தார் பெருமாள்—என்று நம் ஆசாரியர்கள் நிர்வஹிப்பதுண்டு. இதனை இங்கு அறிக.

### இராமன் பரமாத்மாவாயிருக்குந்தன்மையிலும் குறையற்றவன்

இனி ஆத்மாவென்பதற்குப் பரமாத்மாவென்பது ஐந்தாவது பொருள்; பரமாத்மாவையுடையவன் யாவன்? (அதாவது) பரமாத்மாவாயிருக்குந்தன்மையையுடையவன் யாவன்? என்று கேட்கிறபடி. "ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தசரதாத்மஜம்" என்று தானே சொன்னபடி ஒரு மனுஷ்யனாய்ப் பிறந்திருக்கச் செய்தேயும் பரமாத்மாவாயிருக்குந் தன்மையிலும் குறையற்றவன். இராமனுடைய உண்மைத் தன்மையை மறைத்து மறைத்துப் பேசுகிற வான்மீகி முனிவரும் அயோத்யாகாண்டத் தொடக்கத்தில்,

"ஸ ஹி தேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி:,
அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந:"

என்று வெட்டவெளிச்சமாக்கி வைத்தார். இவ்விராமபிரானே கண்ணபிரானாகத் திருவவதரித்து கீதாசாஸ்த்ரமருளிச் செய்கிற போது அதில் அவதார ரஹஸ்யத்தைக் கூறிவருமிடத்து (4—6) "அஜோபி ஸந் அவ்யயாத்மா பூதாநா மீச்வரோபி ஸந், ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம்யாத்மமாயயா" என்கிறான். பரமாத்மாவாயிருக்குந் தன்மையையும் விடாமலே வந்து பிறப்பதாக இதில் தானே சொல்லிவைத்தானாயிற்று. ஆகவே, ஜீவாத்மாவாயிருக்குந் தன்மையோடுகூட பரமாத்மாவாயிருக்குந் தன்மையையும் தாங்கிக் கொண்டிருப்பவன் யாவன்? என்றுகேட்டதாயிற்று. ராமாவதாரத்தில் பரமாத்மாவாயிருந்து செய்த செயல் எதுவென்று பார்க்கவேணும்.

### பரமாத்மத்வம் பொலிந்தவிடமொன்று காட்டுதல்

ஜனஸ்தானத்தில் கரதூஷணாதிவதம் செய்தபோது "சதுர்தச ஸஹஸ்ராணி ரக்ஷஸாம் பீமகர்மணாம், ஏகச்ச ராமோ தர்மாத்மா கதம் யுத்தம் பவிஷ்யதி" என்கிறபடியே பதினாலாயிரம் ராக்ஷஸர்களோடு இராமன் தன்னந்தனியே எப்படி போர்புரிய வல்லவன்? என்று ஆகாச சாரிகள் கலங்கி நிற்க, பெருமாள் அஸஹாயசூரராயிருந்து நொடிப்பொழுதில் அத்தனை யரக்கர்களையும் முடித்தது பரமாத்மபாவத்திற்குத்தான் பொருந்துமென்று சிலர் சொல்லுவதுண்டு. தசரதன், கார்த்தவீரியன் முதலானாரும் இங்ஙனே பல பெரும் போர்கள் செய்ததுண்டாகையால் இது பரமாத்மபாவத்திற்கே அஸாதாரணமென்று கொள்ளவேண்டியதில்லை. "மயா த்வம் ஸமநுஜ்ஞாதோ கச்ச லோகாநநுத்தமாந்" என்று சொல்லி ஜடாயுமஹாராஜர்க்கு மோக்ஷம் கொடுத்திருக்கிறார் பெருமாள்; மோக்ஷப்ரதத்வமென்பது பகவானுக்கே அஸாதாரணமாகையால் இந்த சரித்திரத்திலே பரமாத்மத்தன்மை தெரியவரும் என்று சில பெரியார் சொல்லுவர். இங்குங்கூட "ஸத்யேந லோகாந் ஜயதி" என்

கிற பிரமாணத்தைக்கொண்டு, ஜடாயுவுக்கு மோக்ஷமளித்தது பரமாத்ம பாவத்தினலன்று, ஸத்யவாக்கின் மஹிமையினல்தான் என்று நம்பிள்ளை முதலான ஆசார்யர்கள் நிர்வஹிப்பதுண்டு. அது இராமனது மநுஷ்யபாவனையோடு பொருந்தவைப்பதற்காகவேயாதலால் அதனல் பரமாத்மபாவம் பொலிந்ததென்னத் தட்டில்லை.

ஆக, "ஆத்மா ஜீவே த்ருதௌ தேஹே ஸ்வபாவே பரமாத்மநி" என்ற நிகண்டிற் காணும் பொருள்களைந்தும் ஆத்மவாந் க:? என்ற வினவில் பொருந்தினபடியை விவரித்தோமானேம். .... .... *

---

## 14. க: த்யுதிமாந்?

### பதின்மூன்றுவது வினவின் விவரணம் விட்டதன் காரணம்

ஆத்மவாந் க:? என்கிற பன்னிரண்டாம்வினு கீழே விவரிக்கப்பட்டது; இனி "கோ ஜிதக்ரோத:?" என்கிற பதின்மூன்ரும்வினு விவரிக்கப்படவேண்டும். ஆனல் அது "கஸ்ய பிப்யதி தேவாச்ச ஜாதரோஷஸ்ய ஸம்யுகே?" என்கிற பதினுரும் வினுவோடு சேர்த்து விவரிக்கப்படவேண்டியதாகையாலே இப்போது விடுக்கப்படுகிறது. ஏனென்னில்; ஜிதக்ரோத: க:? என்றதற்கு கோபத்தை வென்றவன் யாவன்? என்பது பொருள். மேல் பதினுருவது கேள்வியின் பொருளோவென்னில் இதற்கு மாருனதுபோல் தோன்ற நின்றது; போர்க்களத்தில் எவனுடைய கோபத்தைப் பார்த்துத் தேவர்களும் அஞ்சி நடுங்குவர்கள்? என்பது முடிவான வினு. க: ஜிதக்ரோத:? என்கிற பதின்மூன்ரும் வினுவையும் அந்தப் பதினுரும் வினுவையும் பொருந்தவைத்து ஒருங்கே விவரிப்போம்; இப்போது க: த்யுதிமாந்:? என்கிற பதினன்காம் வினுவை விவரிக்கின்ரும்.

### இராமஸூர்யனுக்குப் பிராட்டியே பிரபை

த்யுதியாவது ஒளி. ஒளியை யுடையவன் யாவன்? என்று கேட்கிறபடி. உலகில் ஸூர்யனை ஒளியுள்ளவனுகக் காண்கிருேம்; சிறந்த ரத்னத்தை ஒளியுள்ளதாகக் காண்கிருேம். அப்படி, இராமனை ஸூர்யனுகவும் ரத்னமாகவும் வழங்கிவருகின்ருர்கள். ஸ்ரீராமாயணத்திலே [ஸுந்தர காண்டத்தில்] "ராமதிவாகர:" என்றுள்ளதனல் ராமன் ஸூர்யனென்பது ஸ்ரீராமாயணஸித்தமாயிற்று. ராமரத்னம் என்று பலரும் பெயர் வைத்துக்கொள்ளுகிறபடியாலும், ஆழ்வார்கள் "மணியே மணி மாணிக்கமே" என்று ரத்னமாக விளிக்கின்றபடியாலும் ராமன் ரத்னமென்பது விளங்கிற்று. ஸூர்யனுக்கும் ரத்னத்திற்கும் ஒளியினல் பெருமை; இந்த ராமஸூர்யனுக்கும் ராமரத்னத்திற்கும் பெருமையை விளைக்கின்ற வொளி எதுவென்னில்; ஸீதா

பிராட்டியை ஒளியாக ஸ்ரீராமாயணமே நன்கு காட்டித்தருகின்றது. எங்ஙனேயென்னில்; பிராட்டி இராவணனை நோக்கிச்சொல்லிவருகையில் "அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா" என்கிருள். 'ஸூர்யனுக்கு ஒளிபோலே இராமனுக்கு நான்' என்றருளாயிற்று. இவ்விஷயமே இராமபிரானது திருவாக்கிலும் ஒரு சமயம் வெளிவருகிறது. "அநந்யா ஹி மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா" என்று. 'ஸூர்யனுக்கு ஒளிபோலே எனக்கு ஸீதை' என்றதாயிற்று. ப்ரபாவனான ஸூர்யனும் ப்ரபையும் விட்டுப் பிரியாமலே யிருப்பதுபோலே பகவானும் பிராட்டியும் விட்டுப்பிரியாமலே யிருப்பவர்கள் என்கிற தாற்பரியம் முன்னம் உணரத்தக்கது. அவதாரங்களில் ஸீதாபிராட்டியோடு ஒரு காலவிசேஷத்திலே சேர்ந்ததாகவும் மற்றொரு காலவிசேஷத்திலே அவளை விட்டுப்பிரிந்ததாகவும், மறுபடியும் அவளோடு சேர்ந்ததாகவும் பிரிந்ததாகவும் கதைப்போக்கில் தெரியவந்தாலும் இவ்விரண்டு தத்துவங்களும் பரஸ்பரம் விட்டுப் பிரியாத தத்துவங்களாம்.

### பிராட்டியின் நித்யாநபாயித்வம்

திருமந்த்ரார்த்தத்திலே "அவன் மார்பைவிட்டுப் பிரியில் இவ்வக்ஷரம் விட்டுப் பிரிவது" என்றருளிச்செய்திருப்பது காணலாம். "நித்யாநபாயிநீ" என்னப்படுகிருள் பிராட்டி. பகவான் தேவேந்திரனுடைய வேண்டுகோளுக்கிரங்கி மாவலியிடத்து இரப்பாளனாய்ச் சென்றபோது பிரமசாரியாய்ச் சென்றானென்பது பிரசித்தம். மனைவியில்லாதவனுக்குப் பிரமசாரி யென்று பெயர். அத்தகைய பிரமசாரியாச்ரமத்திலுங்கூட ஸ்ரீமஹாலக்ஷ்மியானவள் திருமார்பைவிட்டுப் பிரியவில்லையென்று புராணம் கூறுகின்றது; "க்ருஷ்ணாஜிநேந ஸம்வ்ருண்வந் ச்ரியம் வக்ஷஸ்தலஸ்திதாம்" என்பது புராணவசனம். திருமார்பிலே திகழ்கின்ற பிராட்டியைக் குறட்பிரமசாரியான பகவான் மான் தோலினல் மறைத்துக்கொண்டு சென்றதாகச் சொல்லிற்று. இதனை வேதாந்ததேசிகனும் திருக்கோவலூர் உலகளந்த பெருமாள் விஷயமாக அருளிச்செய்த தேஹளீச ஸ்துதியில்—"பிக்ஷாசிதம் ப்ரகடயந் ப்ரதமாச்ரமத்வம் க்ருஷ்ணாஜிநம் யவநிகாம் க்ருதவாந் ப்ரியாயா:" என்னும் ஸ்ரீஸூக்தியினல் வெளியிட்டருளினர்.

### சில விரோத பரிஹாரங்கள்

அப்படியானல் மிதிலையிற்சென்று ஸீதாவிவாஹம் செய்துகொள்வானேன்? பஞ்சவடியில்பிராட்டியை இராவணன் அபஹரித்ததாகவும் அதனல் பிரிவு விளைந்ததாகவும் அப்போது பெருமாள் கதறியழுததாகவும் சொல்லுவானேன்! இதெல்லாம் பொய்தானே? என்று சிலர் கேட்கக்கூடும். நாரத மஹர்ஷியின் உபதேசங்கொண்டும் நான்முகக்கடவுளின் அநுக்ரஹங்கொண்டும் வான்மீகிமுனிவர்

இயற்றிய ஸ்ரீராமாயணத்திற்கு “ ந தே வாக் அந்ருதா காவ்யே காசித் அத்ர பவிஷ்யதி ” [இதில் பொய்யான பேச்சு ஒன்றுகூட அமையாது] என்கிற தேவதா ப்ரஸாதம் ப்ரஸித்தமாதலால் ராமாயண கதைகளில் பொய்ம்மையுளதாக நெஞ்சாலும் நினைக்க வொண்ணுது. “ ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தசரதாத்மஜம் ” என்று இராவணவதத்திற்குப் பிறகு தேவர்களை நோக்கி இராமபிரான் தானே பணித்தபடி தான் ஏற்றுக்கொண்ட மநுஷ்யபாவனைக்குச்சேர நடந்துகொண்டவிதம் இதிஹாஸபுராணங்களி லுள்ளது. ஸ்ரீமந் நாராயணனுன தன்மைக் குச்சேர்ந்த தத்துவங்கள் தனிப்பட்டவை ; மநுஷ்யபாவனைகொண்டு இராமனுகப் பிறந்து நடித்த நடனத்திற்குச் சேர்ந்த தத்துவங்கள் தனிப்பட்டவை. இதைக்கொண்டு அதை நலியவோ அதைக்கொண்டு இதை நலியவோ கூடாது. ஒன்று திவ்யாத்ம ஸ்வரூபத்தைப்பற்றி யது, மற்றென்று திவ்யமங்கள விக்ரஹத்தைப்பற்றியது என்று கொண்டாலும் குறையில்லை. வான்மீகிமுனிவர் நாரதமுனிவரை நோக்கிக் கேட்கும் கேள்விகளில் இரண்டும் கலசியே யுள்ளதனுல் இருவகைப்பட்ட தத்துவங்களையுமே ஆங்காங்கு நாம் விவரித்து வருகிறோம். பிள்ளைலோகாசாரியர் முமுக்ஷுப்படியில் “ இவளோடே கூடியே வஸ்துவினுடைய உண்மை ” என்று ஒருபுறத்தில் அருளிச் செய்தும் ; மற்றொருபுறத்தில் “ இவள் ஸன்னிதியாலே காகம் தலை பெற்றது, அதில்லாமையாலே ராவணன் முடிந்தான் ” என்றருளிச் செய்தும், ஸ்ரீவசனபூஷணத்தில் “ பிராட்டி முற்படப் பிரிந்தது........ நடுவிற் பிரிந்தது........அனந்தரம் பிரிந்தது ” என்றருளிச்செய்தும் போந்தவை மேலெழப் பார்வையில் விருத்தம்போல் தோன்றும் ; விருத்தங்களல்ல. ஆலயங்களில் எம்பெருமான்களுடைய திருமேனி யிலேயே திருமார்புநாச்சியார் விளங்காநிற்கவும் தனிக்கோயில் நாச்சியாரும் தனிப்பட விளங்கி, பெருமானைத் தனியே ஸேவிப்ப தாகவும் பிராட்டியைத் தனியே ஸேவிப்பதாகவும் சிலகாலங்களில் இருவருமான சேர்த்தியிலே ஸேவிப்பதாகவும் வழங்கிவருகிறோம்.

ஆக, “ அகிலகில்லே னிறையுமென் றலர்மேல்மங்கை யுறை மார்பா !” என்று ஆழ்வாரருளிச்செய்தபடி ஒருவரை யொருவர் விட்டுப்பிரியாத நிலையொன்று உண்டாதலால் அதை நெஞ்சிற் கொண்டே த்யுதிமாந் க: ? என்றவினு எழுந்தது. ஸூர்யன் ப்ரபையை விட்டுப் பிரியாதாப்போலே எம்பெருமானும் நித்யஸித்தமான லக்ஷ்மீ ஸம்பந்தத்தை யுடையனுயிருப்பன் என்றதாயிற்றென்க.

### பிராட்டியை ஒளியாக வைத்து விவரித்தல்

இனி, ரத்னமானது ஒளியினுலேயே மதிப்புப்பெறுமாபோலே எம்பெருமானும் பிராட்டியினுலேயே மதிப்புப் பெறுகிறுனென்பதும் இங்கு உணரத்தக்கதாகும். “பொல்லாத தேவரைத் தேவரல்லா

ரைத் திருவில்லாத் தேவரைத் தேறேன்மின் தேவு" என்ற திருமழிசைப் பிரான் பாசுரங்கொண்டும், "வேதாந்தாஸ் தத்வசிந்தாம் முரபிதுரஸி யத்பாத சிஹ்நைஸ் தரந்தி" "தவ ஸ்பர்சாதீசம் ஸ்ப்ருசதி கமலே! மங்களபதம்" என்ற பட்டர் ஸ்ரீஸூக்திகள்கொண்டும் "பூர்ணம் தேஜ: ஸ்புரதி பவதீபாதலாக்ஷாரஸாங்கம்" என்ற வேதாந்தவாசிரியர் ஸூக்திகொண்டும் இதனை யுணர்க. கீழே "தர்மஜ்ஞ: க:?" என்ற மூன்றாம் வினவை விவரிக்குமிடத்து ஸ்ரீராமாயண கதைகளிலிருந்தே இதனை விரிவாக விளக்கியுள்ளோம். அங்கே கண்டுகொள்வது.

## திருக்குணங்களை ஒளியாக வைத்து நிர்வஹித்தல்

ஆக, ஒளியின் ஸ்தானத்திலே பிராட்டியைவைத்து இவ்வளவும் விவரித்தோம். இனி ஒளியின் ஸ்தானத்திலே திருக்குணங்களை வைத்து நிர்வஹிப்பதுமுண்டு. இதை பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தரசதகத்தில் "தோஷோபதாவதி" என்று தொடங்கியுள்ள ச்லோகத்தில் "ஜ்ஞானைச்வரீசகநவீர்ய பலார்ச்சிஷஸ் த்வாம் ரங்கேச! பாஸ இவ ரத்நமநர்க்கயந்தி" என்றருளிச்செய்தது இவ்விடத்திற்கு மிகப் பொருந்தும். இந்தச்லோகத்தின் கருத்தாவது: ஒளியானது ரத்னத்தை விலைபெறுத்துமாபோலே ரங்கநாதா! உனது திருக்கல்யாண குணங்கள் உன்னை விலைபெறுத்துகின்றன என்பதாம். இதனால், எம்பெருமான் பிராட்டியினாலே ஏற்றம் பெறுமாபோலே திருக்குணங்களினாலும் ஏற்றம் பெறுகிறானென்பது பெறப்பட்டது. நாரதமுனிவரை நோக்கி வான்மீகிமுனிவர் செய்யும் பதினாறு கேள்விகளும் திருக்குணங்களைப்பற்றியவையே யானாலும் வ்யக்தமாகச் சொன்ன குணங்கள்போக மிகுந்த குணங்கள் யாவும் த்யுதிமாந் க:? என்கிற இந்த வினவிலேயடங்கும். பரமபதத்திலே விலை செல்லமாட்டாத திருக்குணங்களை விலை செலுத்துதற்காகவே இந்நாட்டிலே வந்து திருவவதாரங்கள் செய்தனனென்பது பரமார்த்தமாதலாலும், ஸ்ரீராமாயணத்திற்கானும் கதைகளெல்லாம் திருக்குணங்களையே விளங்கக் காட்ட விளைந்தவையாதலாலும் ஸ்ரீராமாயணத்திற்குத் திருக்குணங்களே ஜீவநாடியாகும். ஸகல கல்யாணகுணங்களையுமுடையவன் யாவன்? என்று கேட்டபடியாயிற்று. தமிழில் இரட்டுறமொழிதல் என்று ஒன்றுண்டே? அந்த வகையில், நிரந்தரமான லக்ஷ்மீஸம்பந்தத்தை யுடையவன் யாவன்? திருக்குணங்களினால் விளங்குபவன் யாவன்? என்று இரண்டு வினக்களும் ஒரு வினவிலே அடங்கியுள்ளனவாகக் கொள்ளலாம்.

## பிராட்டியும் குணங்களும் சேர்ந்தே த்யுதிசப்தார்த்தம்

முமுக்ஷுப்படி த்வயப்ரகரணத்தில் "புருஷகாரபலத்தாலே ஸ்வாதந்தர்யம் தலைசாய்ந்தால் தலையெடுக்குங் குணங்களைச்

சொல்லுகிறது நாராயண பதம்" என்றுபிள்ளைலோகாசாரியர் அருளிச் செய்தபடியேலக்ஷ்மீஸம்பந்தமடியாகவே திருக்குணங்கள் தலையெடுப் பனவாதலால் இரண்டும் ஒரு வினாவிலே அமைந்து விளங்குவதும் அழகியதே.

### ப்ராஸங்கிகமாக ஸ்ரீராமகுணாநுபவங்கள்

இனி இந்த ப்ரஸங்கத்தில் ஸ்ரீராமகுணவிசேஷங்களைச் சிறிது அநுபவிக்கலாகின்றது. வான்மீகிமுனிவர் இராமன் திருவவதரித்தா னென்ற கதையைப் பாலகாண்டம் பதினெட்டாம் ஸர்க்கத்திலே யெழுதி அந்த ஸர்க்கத்திலேயே விச்வாமித்ர முனிவன் வந்தா னென்பதையும் எழுதிவைத்தார். அக்காலந் தொடங்கியே நமக்கு ராமகுணங்கள் தெரியவருகின்றன. இராமன் விச்வாமித்திரமுனி வர் பின்னால் செல்லும்போது அவன் பன்னிரண்டு பிராயமுடை யவனென்று அறுதியிடப்பட்டிருக்கிறது. ஆகவே பன்னிரண்டு வயது வரையில் இராமபிரான் காட்டின திருக்குணங்கள் நமக்குத் தெரியவருதற்குப் பிரமேயமில்லாமலிருக்கிறது. ஆயினும் நம் பிள்ளைபோல்வாரான ஆசாரியர்களின் பேரருளால் ஒரு திருக் குணம் சிறப்பாகத் தெரியவருகின்றது. இளையோனாகிய லக்ஷ்மணனைப்பற்றிச் சொல்லும்போது "பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்நிக்த:" என்றார் வான்மீகிமுனிவர்; இளமை முதற்கொண்டே இளை யோன் இராமனிடத்தில் மிகுந்த அன்பு பூண்டவனென்பது இதன் பொருள். இரண்டு மூன்று பிராயம் கடந்த பிறகே 'பால்ய வயது' என்று சொல்லப்படும். ஆனாலும் "பால்யாத் ப்ரப்ருதி" என்கிற விதற்குப் பொருள் கூறுகின்ற ஆசாரியர்கள் 'தொட்டிற் பருவமே பிடித்து' என்று உரைத்தருளி யுள்ளார்கள். (அதாவது, சிசுப் பருவத்தையே பால்யமாகக் கொண்டார்களென்றபடி.) தொட்டிற் பருவம் தொடங்கியே இலக்குமன் இராமனிடத்து மிகுந்த அன்பு பூண்டவனென்பது எங்ஙனம் தெரிந்ததென்னில்; சக்ரவர்த்திக்கு நான்கு பிள்ளைகள் பிறந்தவுடனே தொட்டிலிடும் நாளில் தனித் தனியே நான்கு தொட்டில்கள் இட்டு, பிள்ளைகளின் அவதாரக் கிரமத்தில் முதலிலே இராமனுக்குத் தொட்டிலிட்டு, இரண்டாவ தாகப் பரதனுக்குத் தொட்டிலிட்டு, மூன்றாவதாக லக்ஷ்மணனுக்குத் தொட்டிலிட்டு அத்தொட்டில்களிலே வரிசையாகப் பிள்ளைகளைக் கிடத்தினார்கள். அப்போது இலக்குமனனுடைய தொட்டில் இராம னது தொட்டிலுக்கு அடுத்திராமையினால் சிறிது தூரத்திலே கிடக்க நேர்ந்து அதனைப் பொறாமல் இலக்குமன் வீல் வீலென்று கத்தியழு வன். அப்படியழுவதன் காரணத்தை யறிய கில்லாத தாய்மார் முதலானோர் தேள்கொட்டிற்றோ? பாம்பு கடித்ததோவென்று அதிசங் கித்துத் தொட்டிலைச் சோதனை செய்வர்கள். அங்குச் சிற்றெறும்பு

கூட இல்லாமைகண்டும் எவ்வளவு சமாதானப்படுத்தினுலும் அழுகை ஓயாமைகண்டும் வஸிஷ்டபகவானிடம் ஓடி 'ஸ்வாமிந்; லக்ஷ்மண சிசு ஓயாமல் கத்தியழுகிறது; ஸமாதான முறைகள் ஒன்றும் பலிக்கவில்லே; யாது காரணம்? கண்டு கூறுமின்' என்ன; அவர் வந்துபார்க்கையில் இலக்குமனுடைய தொட்டில் இராமனது தொட்டிலுக்கு அடுத்திராமல் தூரத்திலிருப்பதுதான் இதற்குக் காரணமாயிருக்கவடுக்கு மென்றெண்ணி. 'இராமனது தொட்டிலுக்கு அடுத்தபக்கத்திலேயே லக்ஷ்மணன் தொட்டிலேச் சேரவிடுங்கள்' என்று சொல்லிப்போனுர். அப்படியே சேரவிட்டார்கள்; இலககு மனுடைய அழுகை சிறிது ஓய்ந்தது; ஆனுலும் பூர்த்தியாக ஓயவில்லே. அதனுல் மறுபடியும் வஸிஷ்டமுனிவரிடம் ஓடி 'தேவரீர் சொன்னபடி செய்தோம்; இலக்குமனுடைய அழுகை சிறிது ஓய்ந்ததேயொழிய முற்றிலும் ஓய்ந்தபாடில்லே' என்று சொல்ல, 'அப்படியாகில் இலக்குமனுக்குத் தனித்தொட்டில் வேண்டா; இராம னது தொட்டிலிலேயே உடன்கிடத்துங்கள்' என்று முனிவர் கூற, அங்ஙனமே செய்தவாறே இலக்குமன் அழுகை ஓய்ந்து சிரித்துக் கொண்டேயிருக்க நேர்ந்ததாம். இவ்விசேஷத்தையே "பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்நிக்த:" என்பதனுல் வான்மீகர் காட்டியருளுகிருரென்பர் பெரி யோர். இப்படி சிசுக்களேயும் ஈடுபடுத்தவல்ல அழகும் குணமும் மிக்க இளமையிலேயே வாய்ந்தவன் இராமன் என்பது இதனுல் விளங்கிற்று.

## விச்வாமித்திரர் வந்ததற்கு முக்கியமான காரணம்

இனி, மேலே செல்லுவோம். விச்வாமித்ரமுனிவர் சாமானிய ரல்லர்; அரும் பெரும் தவங்களே அவலீலேயாகச் செய்துமுடித்தவர். அன்னவர், தாம் செய்ய நினேத்தவொரு சிறு வேள்விக்கு இராம னேத் துணே வேண்டிவந்தாரென்பதும், தசரதமன்னவன் தான் சது ரங்க பலத்தோடுங்கூட வந்து காப்பதாகக் கூறச் செய்தேயும் 'நீ வரவேண்டா; உன் புதல்வனேயே அனுப்பவேண்டும்' என்று நிர்ப்பந் தித்து இராமனேயே கூட்டிக்கொண்டு போனுரென்பதும் ஆராயத் தக்க விஷயங்கள். விச்வாமித்திரர்க்குத் தமது யாகம் குறையற நிறைவேற வேண்டுவதுதானே முக்கியம்; தசரதமன்னவனே நேராக வந்து நிறைவேற்றுவதாகச் சொன்னுல் அதை யிவர் தடுக்கவேண்டிய காரணமென்ன? என்று ஆராயுமளவில், இராமன் விச்வாமித்ர முனிவன் பின்னே செல்லுகிற வியாஜத்தினுல் தனது சில திருக் குணங்களே வெளியிட நினேத்துஅதற்காகவே அம்முனிவனே வர வழைத்துத் தன்னேயே யனுப்புமாறு நிர்ப்பந்திக்கச் செய்தனன். அப்படியே அம்முனிவனேடு செல்லுங்கால் வெளியிட்ட திருக்குணங் களில் இரண்டொன்று எடுத்துரைப்போ மிங்கு.

## விச்வாமித்திரர் இராமனைத் துயிலுணர்த்துவதிலுள்ள விசேஷம்

இராமனும் இலக்குமனும் சிறுபிள்ளைகளாகையாலே உறங்கிக் கிடக்க, பின்மாலையில் முனிவன் அச்சிறுவர்களைத் துயிலுணர்த்தித் திருப்பள்ளி யெழுச்சி பாடவேண்டியதாயிற்று. அப்போது இருவரையும் எழுப்பவேண்டியிருந்தும் இராமபிரானொருவனையே எழுப்புவதாக ச்லோகம் காண்கிறது ;

"கௌஸல்யா ஸுப்ரஜா ராம! பூர்வா ஸந்த்யா ப்ரவர்த்ததே.
உத்திஷ்ட நரசார்தூல கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம்," என்று.

"மன்னுபுகழ்க் கௌசலைதன் மணிவயிறு வாய்த்த இராமா! ஸந்தியா வந்தனம் முதலிய நித்யகருமங்களைச் செய்யவேணுமே, எழுந்திரு" என்று சொல்லி யெழுப்புவதாக இந்த ச்லோகமமைந்துள்ளது. ஸகல கருமங்களினுலும் [அதாவது, நித்யம், நைமித்திகம், காமியம் என்கிற எல்லாக் கருமங்களினுலும்] ஆராதிக்கத் தகுந்தவனுன ஸ்ரீமந் நாராயணமூர்த்தியே இராமனுக வந்து திருவவதரித்திருக்கிறுனென்பதை யறியாதவரல்லர் முனிவர்; நன்கறிந்தவர். அவரவர்கள் இவனை நோக்கிக் கருமங்கள் செய்யவேண்டுமே யொழிய, இவன் தான்ஒருகருமமும்செய்யவேண்டியவனல்லன் என்பதைநன்குணர்ந்தவரா யிருக்கச்செய்தேயும் "கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம்—உத்திஷ்ட" என்று சொல்லி யெழுப்பியதனுல் என்ன தெரியவருகிறது? பகவத் கீதையில் (3·22),

"நமே பார்த்தாஸ்தி கர்த்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சந,
நாநவாப்த மவாப்தவ்யம் வர்த்த ஏவ ச கர்மணி"

என்று, நான் நித்ய கருமமொன்றும் செய்யவேண்டிய தில்லையாயினும் அதனை வழுவாது செய்துகொண்டே யிருக்கிறேனென்று சொல்லியிருப்பதானது கேவலம் உக்திமாத்திரமன்று, உண்மையில் அனுட்டிப்பதேயென்று தன்னுடைய ஆசரணையினுல் காட்டிவருவது தெரிகின்றது. பிராட்டியைப் பிரிந்து வருந்தியிருக்கையிலும் பொய்கைகளிற் சென்று ஸந்தியாவந்தனத்தைக் குறையறச் செய்தானென்று ஆங்காங்குக் காட்டி வருகினுர் வான்மீகிமுனிவர். ஓரிடம் காண்மின் ; யுத்த காண்டத்தில் (5-22ல்) ஸூரியன் அஸ்தமித்தானென்றும் அப்போது இராமன் பிராட்டியை நினைத்து மிகமிக வருந்திக்கிடந்தானென்றும் சொல்லி, அடுத்த ச்லோகத்தில் "ஆச்வாஸிதோ லக்ஷ்மணேந ராம: ஸந்த்யாமுபாஸத" [இளையபெருமாளால் தேறுதலடைந்து ஸந்தியாவந்தனம் செய்தான்] என்றும் சொல்லிற்று. சாஸ்த்ரோக்த கருமங்களில் சிரத்தையுடைமையாகிற குணமிது.

## கிங்கரௌ ஸமுபஸ்திதௌ என்றுரைத்த பெருங்குணம்

மற்றொன்றும் கேண்மின்; விச்வாமித்திர முனிவரை நோக்கி இராமபிரான் கூறுகின்றான் :—

"இமௌ ஸ்ம முநிசார்தூல! கிங்கரௌ ஸமுபஸ்திதௌ,
ஆஜ்ஞாபய யதேஷ்டம் வை சாஸநம் கரவாவ கிம்"

என்று. இதன் பொருளாவது: நானும் என் தம்பியும் நீர் இட்ட வேலைகளையெல்லாம் பணிவுடன் செய்வதற்காகவே வந்திருக்கிறோம்; சிறிதும் தயங்காமல் எங்களுக்கு நீர் கட்டளையிடலாம்; எது வேணுமானாலும் செய்யக்காத்திருக்கிறோம்—என்பதாம். இராமன் ஸ்ரீமஹாவிஷ்ணுவென்கிற தன்மையை மறைத்துக்கொண்டாலும் சக்ரவர்த்தியின் திருமகன் என்கிற தன்மைக்குக் கண்ணழிவில்லையே. அப்படி மஹாராஜகுமாரனாயிருந்துவைத்து இழிதொழில் செய்வதற்கே உம்மிடம் வந்திருக்கிறோமென்று கைகட்டி நின்று சொல்லுங் குணத்தை என்னென்பது!

## குகப்பெருமாளிடம் காட்டிய பெருங்குணம்

இனி அயோத்தியா காண்டத்திற்குச் செல்வோம்: "கூரணிந்த வேல்வலவன் குகனோடுங் கங்கை தன்னில், சீரணிந்த தோழமை கொண்டது மோரடையாளம்" என்று அனுமன் சொல்லாகப் பெரியாழ்வார் பணிக்கும்படி குகனென்னுமொரு வேடனோடு தோழமை கொண்ட குணம் என்னே! இதைப்பற்றித் திருமங்கையாழ்வார் பேசுமிடத்து (பெரியதிருமொழி-5-8-1) "ஏழையேதலன் கீழ்மகனென்னாதிரங்கி மற்றவற்கின்னருள் சுரந்து, மாழைமான் மடநோக்கி உன் தோழி உம்பியெம்பியென்றொழிந்திலை, உகந்து தோழன் நீ யெனக்கிங் கொழியென்ற சொற்கள்வந்து அடியேன்மனத்திருந்திட" என்று மனங்கனிந்து பேசுகிறார். க்ஷத்ரியஜாதியில் ஸூர்ய குலத்தில் இக்ஷ்வாகுவமிசத்தில் திருவவதரித்தவனும் சக்ரவர்த்தியின் திருக்குமாரனும் ஸகலைச்வர்யஸம்பன்னனும் மஹாபுத்திமானும் பகைவனிடத்தும் அன்பு கொள்பவனுமான இராமபிரான் குகனை நோக்குங்கால், இவன் இழிவான வேடச் சாதியனென்றும் அதனால் பகுத்தறிவில்லாத அவிவேகியென்றும் அச்சாதிக்கு இயல்பான கொடுமையினால் எல்லாவுயிர்களோடும் பகைமை கொள்பவனென்றும் இகழ்ச்சி கொள்ள வேண்டியது ப்ராப்தமாயிருந்தும் இங்ஙனம் இகழ்ச்சி கொள்ளாது தனது பெருமைக் குணங்களையும் பாராமல் இவனிடம் கலந்து பரிமாறின சீலகுணத்திற்குப் பாசுரமிட்டுப் பேசப்போமோ? "குகனே! என் மனைவியான இந்த ஸீதை உன் தோழி; என் தம்பியான இந்த லக்ஷ்மணன் உன்தம்பியே என்

றும், நீ எனது உயிர்த்தோழன்'' என்றும், இதுவரை நாங்கள் உடன் பிறந்தோர் நால்வராயிருந்தோம்; இப்பொழுது உன்னுடன் ஐந்து பேராயினேம்'' என்றும் ஒற்றுமைநயம் தோன்றக் கூறினதும் நெஞ்சையுருக்கும் நலமன்றோ!

## தண்டகாரண்ய முனிவர்களிடம் காட்டிய பெருங்குணம்

இனி ஆரணியகாண்டத்திற்குச் செல்வோம்; இராமபிரானைக் காணவேண்டி முனிவர்கள் பலர் திரண்டு இராமனது பர்ணசாலைக்கு வந்துசேர்ந்தபோது இராமன் தெண்டனிட்டுக் கைகூப்பி நின்று கூறுகின்றான்—"ப்ரஸீதந்து பவந்தோ மே ஹ்ரீரேஷா ஹி மமாதுலா, யதீத்ருசை ரஹம் விப்ரைருபஸ்தேயைருபஸ்தித:'' என்று; முனிவர்களே! அடியேனை நீங்கள் மிகவும் மன்னிக்கவேணும். உங்களிருப்பிடங்களுக்கு நான் வந்து சேர்ந்து உங்களது யோகக்ஷேமங்களை விசாரிக்கவேண்டியிருக்க, என்னிருப்பிடந்தேடி நீங்கள் வரும்படியாக அந்தோ! அபசாரப்பட்டுவிட்டேனே! என்றான். இந்த விநயமும் மதுரபாஷணமும் பிறரொருவரால் அநுகரிக்கவும் முடியாதன்றோ.

## ஸுக்ரீவனிடத்தில் காட்டிய பெருங்குணம்

இனி கிட்கிந்தாகாண்டத்திற் செல்வோம். "லோகநாத: புரா பூத்வா ஸுக்ரீவம் நாதமிச்சதி'' என்றும் "ஸுக்ரீவம் சரணம் கத:'' என்றும் சொல்லும்படியாக ஒருகுரங்கின்காலிலே குனிந்துநின்றதாகவொரு பெருங்குணம் காட்டப்பட்டது. இராவணனைக்கொல்வதற்கு ஸுக்ரீவனைத் துணை கொண்டதாகவும் அதற்காகவே அவனைப் பணிந்ததாகவும் உலகம் நினைக்கும்படியாக வுள்ளது. வாலியிடத்தில் வாசாமகோசரமான பங்கமடைந்த இராவணனை வதஞ்செய்வதற்கு, அந்த வாலியை அவலீலையாகக் கொல்லுமாற்றல் படைத்த இராமன் ஸுக்ரீவனைத் துணைகொண்டானென்பது தகுதியற்றபேச்சு. "இனையவர்கட்கருளுடையாய் இராகவனே!'' என்று குலசேகராழ்வாருளிச் செய்தபடி தன்னுடைய தீனதயாளுத்வத்தை விளங்கச் செய்வதற்கென்றே இராமன் ஸுக்ரீவனைத் தேடிச் சென்றனனென்பது தத்துவம். அப்படி அவனுக்கு அருள் செய்யச் சென்றவிடத்து தன்னுடைய பெருமையைக் காட்டாது "ஸுக்ரீவம் சரணம் கத:'' என்றும் சொல்லுமாறு பணிவு காட்டி நின்றது குணங்களில் எல்லையானதன்றோ. ஆக இப்படிப்பட்ட பலபல திருக்குணங்களினால் பெருமை பெற்றவன் என்பதே ஷ்ரீமாந் என்றதற்கு உள்ளுறையாகும். .... *

## 15. க: அநஸூயக:?

### வாத்ஸல்யமும் அநஸூயையும் பரியாயமென்பது

ஸ்ரீராமாயணத்தில் வான்மீகி நாரத ஸம்வாதத்தில் "க: அநஸூயக:?" என்கிற பதினைந்தாவது வினா இனி விவரிக்கப்படுகிறது. அஸூயையில்லாதவன் யாவன்? என்பது இந்த வினாவின் பொருள். நற்றங்களையும் குற்றமாகக் கொள்ளும் துர்க்குணம் அஸூயை யெனப்படும். அஃதில்லாதவன் இராமபிரானென்று தேறி நிற்கும்.

### அஸூயையின் பிரபாவம்

உலகில் மனிதருடைய தன்மைகள் ஒவ்வொருவரிடம் ஒவ்வொருவிதமாயிருக்கும். குணங்களைக் குணமாகவே கொள்வது சிலருடைய இயல்பு. குணங்களையும் குற்றமாகக் கொள்வது பலருடைய இயல்பு. குற்றங்களையும் குணமாகக் கொள்வது மிகச் சிறந்த குணவாளரின் இயல்பு. குற்றங்களைக் குற்றமாகவும் குணங்களைக் குணமாகவும் கொள்வது கூட ஒரு சிறந்த குணமென்று சொல்லலாம். ஏனென்னில்; குணங்களையும் குற்றமாகவே கொள்ளுமியல்வினர் மலிந்த இந்நிலவுலகத்தில் உள்ளதை உள்ளபடி கொள்வாருளரேல் வியக்கவேண்டியதேயாகும். அப்படிப்பட்டவர் "மநுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கச்சித்" என்று கீதையிற் சொன்னபடி பல்லாயிரவரில் ஒருவரிருவரே தேறக்கூடும். குணங்களையும் குற்றமாகக் கொள்வதே அஸூயையாதலால் அந்தத் தீய குணத்தை வென்றவர்கள் உலகில் தேடிப் பிடிக்கவேண்டிய நிலையில்தானுள்ளார்கள். உலகில் ஸகலவிதமான வியாதிகளுக்கும் மருந்துண்டு; அஸூயை யென்னும் வியாதிக்கு மருந்தே கிடையாது. ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் வேதாந்ததேசிகர் அற்புதமாக இரண்டு சுலோகங்கள் பணித்துள்ளார்; (1) "மயி தத்நாவதாநாயாம்" (2) "நிரவதி குண க்ராமே" என்பன. இவற்றுள் முதல் சுலோகத்தின் கருத்தாவது: அஸூயாதேவி சோர்வு சோம்பலால் உறங்கிப்போனால் பகவான் குணசாலியென்று பேர்பெறமுடியும்; அந்த அஸூயாதேவி கண்ணுறங்காதிருக்குமளவில் பகவானாலும் குற்றமற்றவனென்கிற பெயர் பெறமுடியாது என்பதாம். இரண்டாவது சுலோகத்தின் கருத்தாவது: தோஷமென்பது சிறிதுமில்லாதவனும் எல்லைகடந்த திருக்குணங்களுக்குக் கடல் போன்றவனுமான இராமபிரானிடத்து மன்றோ சில பாபிகள் வசை கூறுகின்றார்கள்; எவ்விதமான வசை கூறுகின்றார்களென்னில்; முதன் முதலாகத் தாடகாவதமாகிற பெண் கொலையைச் செய்தானென்றும், குற்றமற்றவனை வாலியை மறைந்து கொன்றானென்றும், கரவதத்தில் மூன்றடி பின்வாங்கினானென்றும் இங்ஙனே வசை கூறுகிறார்கள். குணக்கடலான இராமன்

திறத்திலேயே இங்ஙனேயாம்போது, மிகச் சில குணங்களையுடைய ராய்க் குற்றமே வடிவெடுத்திருப்பவர்களான நம்போல்வார்திறத்து உலகம் வசைகூறுவது வியப்போ? என்பதாம்.

ஆக, நற்றங்களையும் குற்றமாக நினைப்பதும் அப்'படி பிறர்க்கு உரைப்பதுமான தன்மைக்கு அஸூயையென்று பெயராய், இதற்கு எதிர்த்தட்டான குணத்திற்கு வாத்ஸல்யமென்று பெயராயிருக்கும். 'க: வத்ஸல:?' என்னுங் கேள்வியின் ஸ்தானத்தில்தான் இங்கு 'க: அநஸூயக:' என்னுங் கேள்வியுள்ளது. அஸூயை யில்லாமை யென்பதுமாத்திரம் உயர்ந்த குணமாகமாட்டாதாதலால், குற்றங்களைக் குற்றமாகக் கொள்ளாதவளவோடு நில்லாமல் நற்றமாகவுங் கொள்ளுகையாகிற வாத்ஸல்யமுடையவன் யாவன்? என்று கேட்பதே இங்குற்றது.

### குற்றங்களை நற்றமாகக் கொள்வதன் சிறப்பு

அன்பின் மிகுதியினால் குற்றங்களைக் காணாமலிருந்துவிடுவது உண்டே யொழிய குற்றங்களை நற்றமாகவும் கொள்வது உண்டோ? நம்முடைய செல்வக் குழந்தைகள் குற்றங்கள் செய்தால் அதுகண்டு சீறித் தண்டிப்பதும் சிலபோதுண்டு; சிலபோதுகளில் குற்றங்களைக் காணாமல் [தண்டியாமல்] இருந்துவிடுவதுமுண்டு. இவ்வளவே யொழியக் குற்றங்களையும் நற்றமாகக் கொள்வதென்பது உண்டோ? என்று சிலர் கலங்கியிருப்பர்கள். அவர்கள் தெளிவதற்கு ஒரு சிறு விஷயம் சொல்லுகிறோம்; தகப்பனார் வெளியே சென்றிருக்கும்போது குமாரன் பல தீம்புகள் செய்கிறான். தகப்பனார் வீட்டுக்கு வந்தவுடனே கோட் சொல்லித் தருமவர்கள் அத்தீம்புகளைச் சொல்லும் போது, தகப்பனார் குமாரனைத் தூணில் கட்டியடிப்பதுமுண்டு, கிடக்கட்டுமென்று வாளாவிருந்து உபேக்ஷை காட்டுவதுமுண்டு; செய்த தீம்புக்கு உகந்து எடுத்தணைத்து முத்தமிட்டு உச்சிமோந்து உள்ளம் பூரித்திருப்பதைக் காட்டுவதுமுண்டு. கண்ணபிரான் *மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம் புக்குக் கச்சொடு பட்டைக்கிழித்துக்காம்புதுகிலவைகீறித்தீமைகள் செய்தவற்றைமுறையிடும்போது யசோதைப்பிராட்டி *ஓர் நெடுங்கயிற்றால் தீரா வெகுளியளாய்ச் சிக்கென ஆர்த்தடிப்பதுமுண்டு; *நானுமுரைத்திலேன் நந்தன் பணித்திலன் நங்கைகாள் நானென் செய்கேன்* என்பதுமுண்டு; "அஞ்சவுரப்பாளசோதை ஆணடவிட்டிட்டிருக்கும்" என்னும்படி "என்குட்டனே முத்தந்தா" என்பதுமுண்டு. குற்றத்தை நற்றமாகக் கொள்ளும் அன்புநிலை இதுவே காணீர். இத்தகைய நிலை எம்பெருமானுக்கு சேதனர்களில் சிலர் திறத்தில் சிற்சில ஸமயங்களில் தோன்றுவதுண்டு; "தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல், என்னடியா ரதுசெய்யார், செய்தாரேல் நன்றுசெய்தா

றென்பர்போலும்" என்கிற பெரியாழ்வார் பாசுரத்தின் சுவைமிக்க பொருளைச் சொல்லவல்லாரிடத்து இதன் விரிவு கேட்டுணரத்தக்கது.

### விபீஷணாழ்வானிடத்தில் காட்டிய வாத்ஸல்யம்

ஸ்ரீராமாயணத்தில் ஸ்ரீராமபிரான் இப்பெருங்குணத்தைக் காட்டின விடங்களில் தலையான விடமொன்று கேண்மின் ;—விபீஷணாழ்வான் "ஸர்வலோக சரண்யாய ராகவாய மஹாத்மநே, நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷணமுபஸ்திதம்" என்று பெருமிடறுசெய்து கூப்பிட்டு அடைக்கலம் புகுந்தவன்று இரண்டு பக்ஷங்கள் தோன்றின ; 'இவன் துஷ்டனாகையாலே அங்கீகரிக்கத் தக்கவனல்லன்' என்று ஸுக்ரீவன் முதலானோர் கூறினர். இவன் அதுஷ்டனாகையாலே [யோக்யனாகையாலே] அங்கீகரிக்கத்தக்கவனேயென்று அனுமன் கூறினன். இது அனைவருமறிந்ததே. சக்ரவர்த்தி திருமகனார் ஸுக்ரீவ பக்ஷத்தைக் கண்டித்து மாருதி பக்ஷத்தை ஆதரித்ததாக எல்லாரும் க்ரஹித்திருப்பர்கள். அப்படியல்லாமல் ஸ்ரீராகவன் ஸுக்ரீவ பக்ஷத்தோடொப்ப மாருதி பக்ஷத்தையும் கண்டித்து மூன்றாவதாக வொரு விலக்ஷண பக்ஷத்தைத் தான் வெளியிட்டருளினதாக அபயப்ரதானஸாரத்தில் வேதாந்ததேசிகர் அற்புதமாக அருளிச்செய்கிறார். அந்த மூன்றாவது பக்ஷம் எதுவாயிருக்குமென்று அறிஞர்கள் தம்தம் உள்ளத்தில் சற்று ஆராய்ந்து பார்க்கவேணும். எவ்வளவு ஆராய்ந்தாலும் அது நம் போல்வாருடைய மேதைக்கு எட்டாது. விபீடணனைக் கைக்கொள்ளலாகாதென்று ஸுக்ரீவாதிகள் கூறினார்கள் ; அவனைக் கைக்கொள்ளவே வேணுமென்று அனுமன் கூறினன் ; முடிவாகப் பெருமாள் அவனைக் கைக்கொண்டார் ; ஆகவே ஸுக்ரீவ பக்ஷத்தைத் தள்ளி மாருதி பக்ஷத்தையே பெருமாள் ஆதரித்தார்—என்று இவ்வளவே தான் நம்போல்வாரால் கிரஹிக்க முடியும். ஸுக்ரீவாதிகள் சொன்ன வார்த்தையைப் பெருமாள் பூர்த்தியாகக் கண்டித்தாரா? மாருதியின் வார்த்தையைப் பூர்த்தியாக ஆமோதித்தாரா? என்று பார்க்க வேணும். பார்க்குமளவில் இரண்டும் இல்லையென்றே தேறும். ஸுக்ரீவனுடைய வாதத்தில் "விபீஷணன் துஷ்டனாகையாலே கைக்கொள்ளத் தகாதவன்" என்றுள்ளது ; இதில் கைக்கொள்ளத் தகாதவனென்பதை மாத்திரம் பெருமாள் கண்டித்தாரேயொழிய 'துஷ்டனாகையாலே' என்கிற ஹேதுவையும் கண்டித்தாரல்லர். மாருதியின் வாதத்தில் 'விபீஷணன் யோக்யனாகையாலே கைக்கொள்ளத் தக்கவன்' என்றுள்ளது. இதில் கைக்கொள்ளத் தக்கவனென்பதை மாத்திரம் பெருமாள் ஆதரித்தாரே யொழிய 'யோக்யனாகையாலே' என்கிற ஹேதுவையும் ஆதரித்தாரல்லர். ஆகவே இரு கக்ஷியிலும் ஆதரித்த அம்சமுமுண்டு, கண்டித்த அம்சமுமுண்டு என்று தேறிற்று. இனி பெருமாளுடைய மூன்றாவது பக்ஷமாகத் தேறினது யாதெனில்,

'விபீஷணன் தோஷவானாகையாலேயே கைக்கொள்ளத் தகுந்தவன்' என்பதுதான். இது ஸுக்ரீவ பக்ஷமுமன்று. மாருதி பக்ஷமுமன்று என்பதை நாம் சொல்லவேணுமோ?

### வேதாந்த தேசிகனுடைய ஸ்ரீஸூக்தி விவரணம்

உலகில் ஆச்சரியமாக ஸ்ரீராமாயண ப்ரவசனம் செய்வார் பலருளர். ஆனால் இத்தகைய ரஸ்யமும் ரஹஸ்யமுமான அர்த்த விசேஷம் வேதாந்த தேசிகருடைய திருவாக்கில் அவதரித்திருந்தும் இதையெடுத்துரைப்பார் மிகச் சிலரே. இப்படி அர்த்தம் செய்யும் படியாக ஸ்ரீராமாயண மூலத்தில் என்ன இருக்கிறதென்னில் "மித்ர பாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந" என்றும், "தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேததகர்ஹிதம்" என்றுமுள்ளது. இவற்றைச் சிறிது விவரிப்போம். மித்ரபாவேந என்றவிடத்தில் மித்ரசப்தம் பக்தனென்னும் பொருளிலாயது. நேசனென்னும் பொருளையே கொண்டாலும் குற்றமில்லை. விபீஷணன் மெய்யன்பனாக வந்தானல்லன்; அன்பனென்று வேஷம்பூண்டு [பாவனை கொண்டு] வந்தவனே; அப்படிப் பட்டவனை நான் கைவிடமாட்டேன் என்கிறார் பெருமாள். இனி "தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத்" என்றவிடம் உயிரானது. இதில் யத்யபி என்றதை வார்த்தைப்பாடாக விட்டொழித்து, தோஷ: தஸ்ய ஸ்யாத்=நான் கைக்கொள்ளுமளவில் அவனுக்கு தோஷம் இருந்து தீரவேண்டும். (அதாவது) அவன் துஷ்டனாகவே யிருக்கவேண்டு மென்றபடி. (இவ்விதமாக வேதாந்த தேசிகர் பொருளுரைக்கிறார்.) குணங்கள் நிரம்பியிருப்பவனையே பெருமாள் கைக்கொள்வதென்று விரதம் கொண்டால் அதிகாரி ஒருவனும் கிடைக்கமாட்டானென்பது தவிர பெருமாளுடைய கருணைக்கும் மேன்மையில்லையாகும். சரணா கதர்களின் குணங்களுக்காக அருள் செய்ததாகுமே யொழிய தம் முடைய கருணையால் காரியம் செய்ததாக ஆகாதன்றோ. இவ்வர்த் தத்தைக் கூரத்தாழ்வான் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் "த்வத்பாதஸம்ச்ர யணஹேதுஷு ஸாதிகாராந் உத்யுஞ்ஜதச் சிதக்ருத்ஸ்ந விதீம்ச்ச தாம்ஸ்தாந், த்வம் ரக்ஷஸீதி மஹிமா ந தவாலமேஷ:" என்கிற சுலோகத்தினால் விளங்கக் காட்டியருளினார். குற்றங் குறைகளையே பச்சையாகக்கொண்டு சரணாகதர்களைக் கைப்பற்றுகிறாரென்பதே பெருமாளுக்கு ஏற்றம்.

### வாத்ஸல்யகுணத்தில் வரும் சங்காபரிஹாரங்கள்

இப்படிக்கொண்டால் அடியவர்களான நாம் குற்றங்களை மனஸ்கரித்தே செய்யவேண்டியதாக நேர்ந்துவிடாதோவென்று இங்குப் பல சங்கைகளைச் செய்வர் சிலர். நாம் சாஸ்த்ரக்கட்டளையின் படியே வர்த்திக்கக் கடமைப்பட்டவர்களென்பது அசைக்க முடியாத படி தேறியிருப்பதாலால் நாம் புத்திபூர்வகமாகவே குற்றஞ்செய்ய

நேர்ந்துவிடுமென்பது தவறு. நெருப்பானது வீட்டைக் கொளுத்து மென்று ஒருவர் நெருப்பின் பெருமையைச் சொன்னவளவால் நம் வீடு நெருப்பிற் கொளுந்தி யொழிந்ததாக வருந்திவிடுவதுண்டோ? இராமனை "க்ஷமயா ப்ருதிவீஸம:" என்று மிக்க பொறுமைக்குண முள்ளவனாகச் சொல்லியிருக்கிறது. 'நாம் எவ்வளவு குற்றங்கள் செய்திடினும் இராமன் பொறுத்தருள்வன்' என்று நம்பிக்கை கொண்டு யாவரும் மனஸ்கரித்துக் குற்றங்களைச் செய்யத் துணிவர்க ளென்று கொண்டு இராமனைப் பொறுமையாளனல்லனென்று சொல்லிவிடமுடியுமோ? இராகவனது திருக்குணங்களில் எந்த குணம் எந்த சமயத்தில் எந்த அதிகாரியின்மீது எவ்விதமாகப் பெருகுமென்று நம்மால் காணமுடியுமோ? ஸுக்ரீவமஹாராஜனிடத் தில் அக்நி ஸாக்ஷிகமாகச் சிறந்த நட்புசெய்து "இளையவர்கட் கருளுடையாய்!" என்று குலாவ நின்ற இராகவன், அந்த ஸுக்ரீவன் குறிப்பிட்ட காலத்தில் படை திரட்டிக்கொண்டு வந்து சேரவில்லை யென்று சீறிச்சிவந்து "ந ச ஸங்குசித: பந்தா யேந வாலீ ஹதோ கத:" என்றும், "ஹநிஷ்யாமி ஸபாந்தவம்" என்றும், [அதாவது, என்னம்புக் கிலக்காகி மாண்ட வாலி போனவழி இன்னும் மறையவில்லை; அதே வழியில் ஸுக்ரீவனையும் சுற்றத்தாருடன் செலுத்துவேன் என்று] கூறின இராகவன் எப்போதுமே பொறுமைக்கடலென்றும், எப் போதுமே குற்றங்களை நற்றமாகக் கொள்பவனென்றும் நினைக்க முடியாதவனாயிருப்பதால் குற்றஞ்செய்ய அஞ்சியிருக்க வேண்டியது சேதனர்களின் கடமையாகும். அவன் பக்கலில் விளங்கும் திருக் குணங்களை யெடுத்துரைக்கு மளவால் எவ்விதமான ஆபத்தும் சங்கிக்கத் தகாது.

## ப்ரஸங்காத் சீமாலிகன்கதையை யெடுத்துக்காட்டுதல்

கண்ணபிரானுடைய சரித்திரங்களில் ஒன்று கேள்விப்படு கிறோம்; "சீமாலிகனவனோடு தோழமைக் கொள்ளவும் வல்லாய், சாமாறு அவனை நீ யெண்ணிச் சக்கரத்தால் தலைகொண்டாய்" என்ற பெரியாழ்வார் பாசுரத்தினால் அறியும் வரலாறு விசித்திரமாக வுள்ளது. உயிர்த்தோழனாகக் கொள்ளப்பெற்றவனையே தலையறுப் பதுஞ் செய்ததாகக் கதை காண்கிறது. இப்படிச் செய்வது பெரும் பாதகமல்லவாவென்று சங்கிப்பவர்களுடைய கலக்கம் தீருமாறு அவ்வாழ்வார் தாமே அப்பாசுரத்திலேயே "ஆமாறு அறியும் பிரானே!" என்கிறார். எந்தெந்த சமயத்தில் யார்யாரிடத்தில் எப்படி பழக வேணுமென்பது அப்பெருமானுக்கே தெரியுமாதலால் அவனது செயல்களில் யாரும் எவ்விதமான குறையும் நினைக்கத்தகாது என் பதையே "ஆமாறறியும் பிரானே!" என்பதனால் ஆழ்வார் காட்டின ராகிறார்.

ஆக, இராமபிரான் குற்றங்களையும் நற்றமாகக் கொள்பவனென்பதே 'அநஸூயக:' என்பதில் விளங்கும் குணமென்றும், இது மிகச் சிறந்த குணமென்றும், இதில் எவ்விதமான ஆக்ஷேபமும் செய்யப்பொருந்தாதென்றும் சொல்லிற்றாயிற்று.

## பிறர் பெருமைகண்டு உகப்பதாகிற அநஸூயை

'நற்றங்களையும் குற்றமாக்குவது அஸூயை' என்றுகொண்டு கீழ் விவரணம் காட்டினேம். 'பிறர்க்குண்டான பெருமையைப் பொறுக்குந்தன்மையில்லாமை அஸூயை' என்றுஞ் சொல்லுவதுண்டாகையால் அப்பொருளின்படியும் சிறிது விவரணம் காட்டுகிறேம். பிறருடைய மேன்மையைக்கண்டு பொறாமையாகிற அஸூயையில்லாதவன் யாவன்? என்பது இந்த வினு. பிறருடைய மேன்மை கண்டு பெருமகிழ்ச்சி கொள்ளுமியல்வினரிடத்தில் அஸூயை யென்னும் துர்க்குணம் தலைகாட்டமாட்டாது. தன்னை யடிபணிந்தார்க்கெல்லாம் பல்வகையான பெருமைகளையு மளிப்பவனுன இராமபிரான் அப்பெருமைகளைக் கண்டு பொறாமைகொள்ள ப்ரஸக்தியில்லை. இவனது திருக்குணங்களைத் தசரதசக்ரவர்த்தி பக்கலில் எடுத்துரைக்கின்ற அயோத்யாவாஸி ஜனங்கள் "உத்ஸவேஷு ச ஸர்வேஷு பிதேவ பரிதுஷ்யதி" என்று கூறியுள்ளார்கள். அவரவர்களது இல்லங்களில் ஸந்தோஷச் செய்திகள் நடைபெறுங்கால் இராமன் ஆனந்தப்படுவதைக் கண்டால் அவர்களுக்கெல்லாம் இவன் தந்தையே! என்னும்படியாயிருக்குமாம்.

## இராமனுல் பெருமை பெற்றவர்கள்

ஏழை ஏதலன் கீழ்மகன் என்று ப்ரஸித்தனனவொரு வேடர் தலைவனை இராமன் பெருமைப்படுத்தியதி லிருந்து அவன் ஆசாரியர்களால் குஹப்பெருமாள் என்று வழங்கப்பட்டு வருகிறுன். சபரியானவள் "சக்ஷுஷா தவ ஸௌம்யேந பூதாஸ்மி ரகுநந்தந!" என்னும்படி இராமனது திருக்கண்ணேக்கமொன்றினுல் பரமபரிசுத்தையாயினள். குரங்கினங்களும் இப்பெருமானது மஹாநுக்ரஹத்தைப்பெற்று ஸுக்ரீவ மஹாராஜரென்றும் அங்கதப் பெருமாளென்றும் ஸ்ரீவானர முதலிகளென்றும் பெருமைபொலிய வழங்கப்பட்டு வருகிறுர்கள். அநுமனுக்குத் திருவடியென்னும் வியபதேசத்தைத் தந்தருளினன். தன்னுடைய அபிமானத்தினுல் கழுகரசன் ஜடாயு மஹாராஜர் என்றும் பெரிய வுடையாரென்றும் வழங்கநின்றுன். ராக்ஷஸ ஜாதீயனுனவொரு பக்தன் விபீஷணுழ்வானென்று விருதூதநின்று "என்னிலங்கு நாமத்தளவு மரசு" என்னப்பெற்று "மன்னுடைய விபீடணற்காய் மதிளிலங்கைத் திசைநோக்கி மலர்க்கண்வைத்த" என்னவும் பெற்றுக் காலதத்வமுள்ளதனையும் பெருமைபெற்று

வாராநின்றான். இங்ஙனே எத்தனை காட்டவேணும்! இப்படி பலர்க்குப் பலவிதமான பெருமைகளை விளைத்து இதனாலேயே உள்ளம் பூரித்திருக்கின்ற இராமபிரான் பிறர் பெருமையைக்கண்டு பொறாமையாகிற அஸூயையென்னும் துர்க்குணத்திற்கு அவகாச லேசமுமற்றவனன்றோ.

### முமுக்ஷுப்படி திவ்யஸூக்தியொன்று

மானிடர்க்குண்டாகும் தீயகுணங்களில் அஸூயையொன்றே தலைமை பெற்றது. இதனை வென்றவர்கள் உலகில் கிடைப்பது மிகவுமரிதே. பிள்ளைலோகாசாரியர் தாமருளிச்செய்த முமுக்ஷுப்படியென்னுமொரு திவ்விய நூலில் "இப்படியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களின் ஏற்றமறிந்து உகந்திருக்கை" என்று பணித்தவிடத்திலே வியாக்கியான கர்த்தாவான மணவாளமாமுனிகள்,

"மற்றைக் குணங்களெல்லாமுண்டானாலும் உண்டாக அரிதாயிருப்பதொன்றன்றோ இது"

என்று அருளிச்செய்கிறார். ஆகவே இத்தீயகுணம் மானிடர்க்கு மருந்தில்லா வியாதியே யென்னத்தட்டில்லை. இராமபிரான் "ரிபூணமபி வத்ஸல:" என்று அடிக்கடி கொண்டாடப்படுகிறான். பகைவரிடத்தும் குற்றம் பாராதவன், பகைவர்க்கும் பெருமையை விளைக்க நினைப்பவன் என்று ப்ரஸித்திபெற்ற இராமபிரானொருவனே "க: அநஸூயக:?" என்கிற வினாவுக்கும் விடைக்குமிலக்காகத் தகுமவன்.

### கீதாபாஷ்யத்தின்படி அநஸூயா நிரூபணம்

பகவத்கீதையில் (9-1.) "ப்ரவக்ஷ்யாமி அநஸூயவே" என்னுமிடத்தில் பாஷ்யம் செய்தருளாநின்ற ஸ்ரீராமாநுஜர் 'சாஸ்த்ரோக்தங்களான விஷயங்களைக் கேட்டால் இது பொருந்தாதென்று குதர்க்கம் செய்பவன் அஸூயையுடையவன்; பொருந்துமென்று உகந்திருப்பவன் அஸூயையில்லாதவன்" என்று கருத்துரைக்கிறார். இவ்விதமான பெருமையும் இராமபிரானுக்கே ஏற்கும்.

### ராம ஜாபாலி ஸம்வாதம்

இராமனைக் காட்டில்நின்றும் திருப்பித் திருவயோத்திக்கு எழுந்தருளப்பண்ணிக் கொண்டு போகவேணுமென்று சித்திர கூடத்திற்கு வந்த பரதாழ்வானுக்குப் பரிந்து ஜாபாலியென்னும் முனிவன் இராமன்பக்கலில் சில நாஸ்திக வாதங்களைச் செய்யத்தொடங்கினன்:— "ஆச்வாஸயந் தம் பரதம் ஜாபாலிர் ப்ராஹ்மணோத்தம:, உவாச ராமம் தர்மஜ்ஞம் தர்மாபேதமிதம் வச:" என்று (அயோ. 108-1) வான்மீகிமுனிவரும் [தர்மாபேதம் வச: உவாச] என்று சொல்லுமாறு சாஸ்த்ரவிருத்தமான வார்த்தைகளைச் சொன்னான். அப்போது

இராமன், "அம்ருஷ்யமாண: புநருக்ரதேஜா: நிசம்ய தந் நாஸ்திக வாக்ய வேஷம், அதாப்ரவீத் தம் ந்ருபதேஸ் தநூஜோ விகர்ஹ மாணோ வசநாநி தஸ்ய." (அயோ. 109-30) என்றபடியே, பெரிய ப்ராஹ்மணோத்தமனான ஜாபாலி சொன்ன சொல்லாயிற்றே! என்றும் பாராமல் நாஸ்திக வாதத்தைச் சிறிதும் ஸஹிக்கமாட்டாமல் அந்த முனிவனைச் சீறி வெறுத்ததாகவுங் காண்கிறது. ஆக, எல்லாப் படிகளாலும் இராமன் அஸூயையற்றவனென்றதாயிற்று.

---

## இனி 13, 16 வினுக்களின் விமர்சனம்

இனி அடுத்த திருக்குணத்தை ஆராய்வோம். கீழே "ஆத்ம வாந் க:?" என்கிற பன்னிரண்டாம் வினுவுக்கு அடுத்ததான "ஜிதக்ரோத:?" என்கிற பதின்மூன்றும் வினு விவரிக்கப்படாமல் விடுபட்டிருக்கிறது. அந்தவினுவை மேலுள்ள பதின்மூன்ருவதுவினுவோடு சேர்த்து விவரிக்கவேணுமென்று விட்டிருந்தோம். ஜிதக்ரோத: க:? என்றதற்கு கோபத்தை வென்றவன்யாவன்? என்று பொருள். 'கஸ்ய பிப்யதி தேவாச்ச ஜாதரோஷஸ்ய ஸம்யுகே?' என்கிற மேல் வினுவுக்கு 'போர்க்களத்தில் எவனுடையகோபத்தைப் பார்த்துத் தேவர்களும் அஞ்சி நடுங்குவார்கள்? என்றுபொருள். ஆகவே இவ்விரண்டு வினுக்களும் ஒன்ருேடொன்று முரண்பட்டிருப்பதுபோல் தோன்றும். முரண்பாடின்றி ஸமந்வயப்படுத்தி விவரிப்போமிங்கு.

### இராமபிரானது சீற்றத்தின் வைசித்திரிகள்

'ஜிதக்ரோத: க:' என்ற பதின்மூன்ருவது வினுவுக்கு 'கோபத்தைவென்றவன் யாவன்?' என்று பொருளேயன்றிக் கோபமில்லாதவன்யாவன்? என்பதாகப் பொருளன்று. கோபத்தை வெல்வதாவது—அதனை ஸ்வாதீனப்படுத்தி வைத்துக்கொள்ளுகை. சிலர் எப்போதும் கோபிஷ்டர்களாகவே காணப்படுவர்; சிலர் அடியோடு கோபமேயில்லாதவர்களாயிருப்பர். இரண்டும்தவறு. கோபத்தைக் காட்டிக் காரியங்கொள்ளவேண்டிய ஸமயங்களில்மாத்திரம் கோபத்தைவரவழைத்துக்கொள்வதும், காரியம் ஆனவாறே அக்கோபம் இருக்குமிடம் தெரியாமற்போம்படி செய்துகொள்வதும் உத்தம புருஷர்களின் லக்ஷணமாகும். அரசன் குற்றவாளிகளையும், உபாத்தியாயர்கள் மாணுக்கர்களையும், தந்தையர் மக்களையும் தண்டிக்கவேண்டிய காலங்களில் அவசியம் தண்டிக்க ப்ராப்தமாகிறது. இதற்கு சாஸ்திரங்களில் அனுமதியுள்ளதாதலால் மேற்சொன்ன தண்டனைகள் தவருகமாட்டா. அங்ஙனம் தண்டிக்க நேரும்போது கோபமுண்டாகியே தீரும். கோபமில்லையாகில் தண்டிக்க முடியாதன்ருே, ஆகவே

இக்கோபம் தவிர்க்கமுடியாததே. 'எப்போது பார்த்தாலும் இவன் முகத்தில் எள்ளுங் கொள்ளும் வெடிக்கிறது' என்னும்படியாகச் சில ருளர். அவர்களை வடநூலார் 'ப்ரக்ருதிகோபநா:' என்பர்; கோபமேஇயல் வாகவுள்ளவர்கள் என்றபடி. இராமனது தன்மையோ வென்னில்; போர்க்களத்தில் காணும்போது "அங்கண்ஞால மஞ்ச" என்றும் "முனைத்தசீற்றம் விண்சுடப்போய் மூவுலகும் பிறவும் அனைத்து மஞ்ச" என்றும் "உயிர்மலங்கக் கொண்ட சீற்றமொன்றுண்டு" என்றும் "சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச்செற்ற" என்றும் சொல்லுகிறபடியே வந்தேறியான கோபம் அளவிட வொண்ணாத தாகவேயிருக்கும். மற்றைப் போதுகளில் பார்த்தாலோ, 'இவனிடத்து ஒருநாளும் கோபம் வந்து குடிபுகாது' என்னும்படி பரமஸௌம்யனாயிருப்பன்.

வான்மீகி முனிவனது வினாக்களுக்கு விடைகூறுகின்ற நாரத முனிவர் "இக்ஷ்வாகுவம்சப்ரபவோ ராமோநாம ஜனைச் ச்ருத:" என்று இராமபிரானைச் சொல்லத்தொடங்கி "ஸதைவ ப்ரியதர்சந:" என்றும் "ஸோமவத் ப்ரியதர்சந:" என்றுஞ் சொல்லி, மேலே "காலாக்நி ஸத்ருச: க்ரோதே" என்றும் சொல்லியுள்ளார். இரண்டு வகையான வினாக்களுக்கும் தகுந்தவிடைகளே கூறிவைத்தார். மேல் அயோத்யா காண்டம் முதல் ஸர்க்கத்தில் ஸ்ரீராமனது திருக்குணங்களைச் சரமாரி யாகப் பொழிந்துவருகின்ற வான்மீகி முனிவர்.

"அப்ரத்ருஷ்யச்ச ஸங்க்ராமே க்ருத்தைரபி ஸுராஸுரை:
அநஸூயோ ஜிதக்ரோதோ....நச மத்ஸரீ."

என்கிறார். சக்ரவர்த்தியிடம் ஸ்ரீராமகுணங்களை யெடுத்துரைக்கின்ற நகரத்து ஜனங்கள் 'ஸ்மிதபூர்வாபிபாஷீ' என்று இராமனைச் சிறப்பித்துக் கூறுகின்றனர். யாவரோடும் சிரித்துக்கொண்டே அழகாகப் பேசு மவனும் இராமன். "பௌராந் ஸ்வஜநவத் நித்யம் குசலம் பரிப் ருச்சதி' என்றும் சொல்லுகின்றனர். அயோத்திமா நகரிலுள்ள மக்களையெல்லாம் உற்றாருறவினராகவே பாவித்து நாடோறும் சேமம் விசாரிப்பவனும் இராமன். இதற்குமேலே சொல்லுவதை முக்கியமாகக் குறிக்கொண்மின் ;

"நாஸ்ய க்ரோத: ப்ரஸாதச்ச நிரர்த்தோஸ்தி கதாசந
ஹந்த்யேஷ நியமாத் வத்யாந் அவத்யேஷு ந குப்யதி"

என்றார்கள் அயோத்திமக்கள். இதன் பொருள் யாதெனில்; இரா மனுக்குக் கோவமோ அனுக்கிரகமோ ஒருபோதும் காரண மின்றி உண்டாகாது; தண்டிக்கவேண்டியவர்களைத் தண்டித்தே தீருவன்; குற்றமற்றவர்களிடத்தில் கோபமே கொள்ளான்' என்பதாம்.

## கோபவிஷயமான இரண்டு வினாக்களின் ஆவச்யகத்வம்

'க: ஜிதக்ரோத:?' என்கிற ஒரு கேள்வியே போதுமென்றும் பதினாறுவது கேள்வி தனிப்பட வேண்டியதில்லையே யென்றும் சிலர் நினைக்கக்கூடும். கோபத்தை வென்றவன் என்றால், வேண்டாத ஸமயங்களில் அதனை விலக்கி, வேண்டிய ஸமயங்களிற் கொள்பவன் என்பதே பொருளாதலால் ஒரு கேள்வியே போதும் இரண்டு கேள்விகள் வேண்டாவென்று நினைப்பது தகுதியே. ஆனாலும் "கஸ்ய பிப்யதி தேவாச்ச ஜாதரோஷஸ்ய ஸம்யுகே' என்னுமிப் பதினாறுவது வினாவின் பொருள் யாவும் "கோ ஜிதக்ரோத:?" என்னும் வினாவில் அடங்கியிருக்க முடியாதாதலால் தனிப்பட்டவினா அவசியமே யென்க.

'ஜிதக்ரோத:' என்பதில் ஸாதாரணமான கோபம் தோன்றும். இந்தவினாவில் கண்கொண்டு காணவொண்ணாத [அபரிமிதமான] கோபம் தோன்றும். இரண்டுக்கும் உதாரணமாக இராமாயணத்திற் சிலவிடங்கள் காட்டுகிறோம். யார்க்கும் கோபமுண்டாவது தீங்கு செய்வாரிடத்தில் தானே; தீங்கு செய்பவர்கள் இருவகைப் படுவார்கள்; தம்மிடத்தில் நேராகத் தீங்கு செய்பவர்கள் ஒரு வகுப்பினர்; தமது அன்பர்களிடத்தே தீங்கு செய்பவர்கள் மற்றொரு வகுப்பினர். உலகில் நம்போல்வாருடைய இயல்பு எப்படிப்பட்டதென்றால், நமது அன்பர்களுக்கு யாரேனும் தீங்கு செய்தால் அதைப் பொருள்படுத்தாமல், நமக்கு நேராகத் தீங்கு செய்வார் திறத்திலேயே சீற்றங் கொள்வதுதான் பெரும்பான்மையாகக் காணப்படுமியல்பு. பகவானது தன்மை இதற்கு மாறானது. பிறர் தன்னளவிலே எத்தனை தீங்கு செய்தாலும் சீற்றமுறான்; மனோ விகாரம் சிறிதுமடையான் தன்னடியார்க்குத் தீங்கிழைப்பார் திறத்திலேயே மிக்க சீற்றங்கொள்வான். இதைக் கண்ணபிரான் ஒரு சந்தர்ப்பத்தில் அற்புதமாக எடுத்துரைக்கின்றான். பாண்டவர்க்காகத் துரியோதனனிடம் தூதுபோன காலத்தில் துரோணர் பீஷ்மர் துரியோதனர் ஆகியமூவரும் தம்தம் இல்லத்திற்கே கண்ணபிரான் அமுது செய்ய வரக் கூடுமென்றெண்ணித் தங்கள் மனைகளிலே போஜன வகைகளைச் சிறப்பாகச் செய்து வைத்திருந்தார்கள். கண்ணனோ பரமபக்தரான விதுரருடைய திருமாளிகையிலே அமுது செய்து விட்டு அவர்களிடத்திலே வந்துசேர்ந்தனன். அப்போது துரியோதனன் கண்ணபிரானைக் கேட்கிறான்.

"பீஷ்ம த்ரோணாவதிக்ரம்ய மாஞ்சைவ மதுஸூதந,
கிமர்த்தம் புண்டரீகாக்ஷ! புக்தம் வ்ருஷல போஜநம்?"

கண்ணா! பீஷ்மரையும்விட்டு த்ரோணரையும்விட்டு என்னையும்விட்டு ஒரு சூத்ரனுடைய அன்னத்தை உண்டுவந்தாயே, இதுவென்? என்று.

இதற்குக் கண்ணபிரான் விடையிறுக்கவேண்டியவிதம் யாதெனில்; "விதுரர் சூத்ரயோனியிலே பிறந்திருந்தாலும் அவர் சூத்ரரல்லர்; "ந சூத்ரா பகவத்பக்தா விப்ரா பாகவதாஸ் ஸ்ம்ருதா:" என்கிறபடியே அவர் அந்தணர்தலைவரேயாவர்; நான் சூத்ரான்னபோஜனம் செய்ததாகக் கொண்டு என்னைப் பழிப்பது உசிதமன்று" என்றிங்ஙனே விடையிறுத்திருக்கவேண்டும். ஆனால் கண்ணன் இங்ஙனம் விடை கூறாமல்,

"த்விஷதந்நம் ந போக்தவ்யம் த்விஷந்தம் நைவ போஜயேத்
பாண்டவாந் த்விஷஸே ராஜந் மம ப்ராணா ஹி பாண்டவா:"

என்று விடைகூறினன். 'த்வேஷிகளின் அன்னத்தை உண்ணவுங் கூடாது; த்வேஷிகளுக்கு அன்னமிடவுங்கூடாது; நீ பாண்டவர்களிடத்தில் துவேஷங்கொண்டவன்; பாண்டவர்கள் எனக்கு உயிர் நிலை' என்பது இந்த சுலோகத்தின் பொருள். ஒருவன் ஒருவனுடைய உடலில் கத்தியிட்டால் மருந்திட்டு ஆற்றலாம். உயிர்நிலையில் கத்தியிட்டால் மருந்தில்லையே. பாண்டவர்போன்ற பாகவதர்களை பகவான் தன் உயிர்நிலையாகக் கருதுகின்றான். கீதையில் "ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்" என்று ஞானிகளைத் தனது உயிராகவும் அவர்களுக்குத்தான் உடலாகவும் சொல்லி யிருப்பதும் குறிக்கொள்ளத்தக்கது. ஆக இவற்றால், பகவான் தன்னிடத்து அபசாரப் படுமவர்களைப்பற்றிச் சீற்றங்கொள்ள மாட்டானென்றும் தன்னடியார் திறத்து அபசாரப்படுமவர் திறத்தே மிகச் சீற்றங்கொள்வனென்றும் திடமாக அறியலாகிறது. இவ்விஷயத்தைக் கூரத்தாழ்வான் வரதராஜஸ்தவத்தில்,

"யதபராத ஸஹஸ்ர மஜஸ்ரஜம் த்வயி சரண்ய! ஹிரண்ய உபாவஹத்,
வரத! தேந சிரம் த்வமவிக்ரிய: விக்ருதிமர்ப்பக நிர்ப்பஜநாதகா:"

என்கிற சுலோகத்தில் விளங்கவைத்தார். இரணியாசுரன் பகவான் திறத்தில் அபரிமிதமான அபராதங்களைச் செய்திருந்தும் பகவான் சிறிதும் சீற்றங்கொள்ளாதிருந்து, பரமபக்தனான ப்ரஹ்லாதாழ்வானிடத்து அவன் அபசாரப்பட்டதற்காகவே கனத்த சீற்றங்கொண்டதாக இந்த சுலோகத்தில் உள்ளது.

### இராமபிரானுடைய இருவகைக் கோபங்களின் விவரணம்

ஸ்ரீராமபிரானும் தன்னளவில் அபசாரப்பட்டவர்களிடத்தே சீற்றங்கொள்வதற்கு மிகவும் சிரமப்படுவதாகவும் தன்னடியார் திறத்து அபசாரப்பட்டவர்களிடத்துத் தான் கோபமிட்ட வழக்கா கின்றதாகவும் வான்மீகி வெகு அழகாகக் கூறுகின்றார்.

இராமன் கடலரசனை நோக்கிச் சரணாகதி செய்து மூன்றுநாள் கடற்கரையிலே சயனித்துக்கிடந்தும் கடலரசன் வந்து முகங்காட்

